# மங்கை

ஜனவரி '94

★ பிள்ளையார் பட்டி -அருள்வலம்

★ தாய்மார்கள் இருக்கும்வரை சமயமும் இருக்கும்

-வாரியார் ஸ்வாமிகள்

★ சங்கீதத்தில் லால்குடியின் சாயல் ஏன்? -பம்பாய் ஜெயஸ்ரீ

★ தொலைக்காட்சி அரங்கம்

-மாலா மணியன்

★ இதய நோய் வருமுன் காப்போம்

-டாக்டர். எம். ஜெயராஜா

★ செம்மங்குடி கட்டுரை -நீலம்

★ கவிதை - விசாலி கண்ணதாசன்

மங்கை-ராசி சேலை பேஷன், சிறுகதைகள், கட்டுரைகள் மற்றும் பல சிறப்புப் பகுதிகள்

விலை ரூ.6/-

TA—F-1

## உங்கள் கனவின் நிறைவு அவன் கண்களில்
## அவனது எதிர்காலம் உங்கள் கைகளில்



# குழந்தைகள் பரிசு வளரும் நிதி.

## உங்கள் அன்பைப் போலவே அது வளர்கிறது, வளர்கிறது, வளர்ந்து கொண்டே போகிறது.

நீங்கள் அவனது தேவை ஒவ்வொன்றையும் பார்த்து, பார்த்து பூர்த்தி செய்து, தினத்தின் ஒவ்வொரு நிமிடத்தையும் பாதுகாப்பாக உணரச் செய்கிறீர்கள். அவனது எதிர்காலத்தைப் பற்றி சிந்திக்க சிறந்த சமயமும் இதுதானே. உங்களின் இன்றைய சிறிது சிந்தனை உங்கள் கண்மணியின் வளமான எதிர்காலத்திற்கான பரிசாக மாறும். எப்படியா? இதோ நாங்கள் அளிக்கும் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. இதில் ஒரே முறையாக குறிப்பிட்ட தொகையை முதலீடு செய்யுங்கள் அல்லது ஆண்டுதோறும் சிறிது சிறிதாகவும் முதலீடு செய்யலாம். உங்கள் முதலீடும் வளர்ந்து கொண்டே வரும் உங்கள் கண்மணியின் வயது 21 ஆகும்வரை, அவன் லட்சாதிபதியாவதைக் காணலாம். இப்பரிசு எப்படி உபயோகமாகும் என்பதைக் காணுங்கள். உங்கள் கண்மணியின் மேல்படிப்பிற்கு அல்லது சொந்தமாக தொழில் தொடங்க உதவலாம் அல்லது அவன் சொந்தமாக வீடு வாங்கலாம். அவன் 18 வயதான பிறகு வருடத்திற்கு இரு முறை பணத்தை எடுக்கலாம், மீதமுள்ள முதலீடு 21 வயதாகும் வரை வளர்ந்து கொண்டே இருக்கும். குழந்தைகள் பரிசு வளரும் நிதி. ஒரு நாள் உங்கள் கண்மணி உங்களுக்கு நிச்சயமாக நன்றி செலுத்துவான்.

14% டிவிடெண்ட்.
3 வருடங்களுக்கு ஒருமுறை போனஸ்.




**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் மேலான எதிர்காலத்திற்கென

எல்லா செக்யூரிட்டீஸ் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவையாகும். முதலீடு செய்வதற்கு முன் உங்கள் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 210399 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 32619

UTI.131.93 TM E





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## நேற்றைவிட நல்லது இன்று!

**நா**ம் புத்தாண்டில் புதிய தீர்மானங்களுடன் அடி எடுத்து வைத்திருக்கிறோம். காலம்தான் எப்படிப் பறக்கிறது என்று பலர் ஆச்சரியத்துடன் கூறி புத்தாண்டை வரவேற்கிறார்கள்.

காலம் வெகு வேகமாகக் கழிவதுடன் கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் நிகழ்காலத்துடன் இணைக்கிறது. காலத்திற்கு அளவு உண்டு. இந்த அளவைக் கொண்டு மனிதன் அதிக சக்தியுடன் தன் வருங்காலத்தை உருவாக்க முயல்கிறான். இப்படிப்பட்டவனே மனித வர்க்கம் உயர வழி செய்கிறான்.

காலம் நிற்பதில்லை. அது தொடர்ந்து போய்க் கொண்டே இருக்கிறது. காலத்திற்கு ஆரம்பம் என்பதும் முடிவு என்பதும் இல்லை. அழிவும் இல்லை. மாறுவதும் இல்லை. ஆயினும் நாம் பனிரெண்டு மாதங்களை ஒரு ஆண்டு என்பதோடு அதன் முதன் மாத முதல் நாளைப் புத்தாண்டு நாள் என்கிறோம். இச் சமயத்தில் மனிதர்களாகிய நம்மில்தான் மாற்றங்கள் ஏற்பட வேண்டும். இந்த மாற்றங்கள் நல்லதற்காக ஏற்பட வேண்டும். புத்தாண்டில் செய்யும் தீர்மானங்கள் இத்தகையனவாக இருக்க வேண்டும்.

ஆனால் நம் முன்னேற்றத்திற்கான தீர்மானங்கள் செய்ய நாம் முன்னூற்று அறுபத்தைந்து நாட்கள் காத்திருக்க வேண்டுமா? நாம் மாற்றங்களை நம் முன்னேற்றத்திற்காகத் தீர்மானிப்பதை எந்த நாளிலும் தினமும் கூடச் செய்யலாமே. எனவே இன்றே செய்வோம். நன்றே செய்வோம்.


மதிமுகம்: 94 ஜனவரி 1994 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00




# நோபல் பரிசு இரு தலைவர்களுக்கு!





ஒவ்வொரு ஆண்டு டிசம்பரில் யாவரும் நார்வே நாட்டின் ஓஸ்லோ நகரில் நடப்பதை ஆவலுடன் கவனிப்பார்கள். இங்கு நோபல் பரிசு அளிக்கப் படுகிறது. இந்த ஆண்டிற்கான நோபல் பரிசு தென் ஆப்பிரிக்க நாட்டுத் தலைவர் எப். டபிள்யூ. டிகிளார்க்கிற்கும் ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் தலைவர் நெல்சன் மண்டேலாவுக்கும் பகிர்ந்து அளிக்கப்படுகிறது.

ஒரு காலத்தில் கடும் பகைவர்களாக இருந்த இந்த இருவர்களுக்கும் அமைதிக்கான நோபல் பரிசு ஏன் ஆளிக்கப்பட்டது? கடந்த நூறு ஆண்டுகளாகத் தென்னாப்பிரிக்காவில் இனப் போராட்டம் நடந்து கொண்டே இருந்தது. தென்னாப்பிரிக்காவிற்கு வந்து குடியேறிய சிறுபான்மையினரான வெள்ளையருக்கும் அங்கேயே இருந்து வரும் பெரும்பான்மையினரான கறுப்பர்களுக்குமிடையே தான் இப்போராட்டம் நடந்தது. ஆட்சியில் இருக்கும் வெள்ளையர்கள் கறுப்பர்களை இன அடிப்படையில்-அடிமைகள் போல நடத்திக் கொடுமைகளை இழைத்தனர். கறுப்பர்களுக்கு ஆட்சியில் பங்கு இல்லை. அவர்களது உரிமைகள் மறுக்கப்பட்டன. ஒரு சில குறிப்பிட்ட துறைகளில் மட்டுமே கறுப்பர்கள் செயல்பட முடியும். இதனால் பொருளாதாரம், கல்வி ஆகிய துறைகளில் அவர்கள் முன்னேற முடியவில்லை.

இதனால் கறுப்பர்கள் வெகுண்டு தமக்கு நீதி சுதந்திரம், சமத்துவம் வேண்டுமெனப் போராட்டங்களை நடத்தினார்கள். கறுப்பர் தலைவரான நெல்சன் மண்டேலா 1960ல் தென்னாப்பிரிக்கா தேசீய காங்கிரஸை நிறுவினார். உடனேயே இனவெறிபிடித்த தென்னாப்பிரிக்க அரசு அவரைப் பயங்கரவாதி

என அறிவித்துச் சிறையில் அடைத்தது.

சிறையில் தனியாக இருந்த மண்டேலா 27 ஆண்டுகள் நடத்திய இந்தப் போராட்டத்தை காந்திஜீ நம் நாட்டில் நடத்திய அகிம்சைப் போராட்டத்திற்கு ஒப்பிடலாம். சிறைக்கு வெளியேயும் போராட்டம் தீவிரமாகியது. அவ்வப்போது ஆட்சி மாற்றங்கள் ஏற்பட்டன. 1989ல் எப். டபிள்யூ. டிகிளார்க் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார்.

டிகிளார்க் இன வேறுபாடுகளை வலியுறுத்திய சட்டங்களை நீக்கினார். கறுப்பர்களுக்கு ஆட்சியில் பங்குதர முன் வந்தார். கறுப்பர்கள் அவரது திட்டத்தை ஏற்பதாகக் கூறி நெல்சன் மண்டேலாவை எவ்வித நிபந்தனையுமில்லாமல் விடுதலை செய்ய வேண்டும் என்று கோரினார்கள். 1990ல் மண்டேலா விடுதலை செய்யப்பட்டார்.

சிறையிலிருந்து வெளிவந்த மண்டேலா எவ்வித வெறுப்பும் கொள்ளாமல் 27 ஆண்டுகளுக்கு முன் தாம் கடைப்பிடித்த சாத்வீக முறையையே கையாளப் போவதாக அறிவித்தார். தாம் விரும்புவது கறுப்பர்களுக்கும் ஆட்சியில் பங்கே ஒழிய கறுப்பர்களின் சர்வாதிகாரம் அல்ல என விளக்கினார். டி கிளார்க்குடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினார். ஒருவனுக்கு ஒரு வாக்கு என்ற அடிப்படையில் ஒப்பந்தம் ஏற்பட்டது.

நீண்ட காலமாக விரும்பிய நீதி கறுப்பர்களுக்கு கிடைத்துவிட்டது. அவ்வப்போது கிளம்பிய வன்முறைகள் தலைதூக்கினாலும் அவற்றைப் பெரிது படுத்தாமல் டிகிளார்க்கும் நெல்சன் மண்டேலாவும் பேச்சு வார்த்தைகள் வாயிலாக ஒரு புதிய அரசியல் ஏற்பாட்டைச் செய்தனர். இது நோபல் கமிட்டியின் கவனத்தை ஈர்த்தது.

நோபல் பரிசு பற்றிய அறிவிப்பு வந்ததும் டிகிளார்க் அது மிக உயரிய கௌரவமாகக் கருதி ஏற்பதாகக் கூறினார். தென்னாப்பிரிக்கர்களை இது கௌரவிக்கிறது. என மண்டேலா கூறினார். நோபல் பரிசு இருவருக்கும் பகிர்ந்து அளிக்கப்படுவது பாராட்டப்பட வேண்டியது என 1984ல் நோபல் பரிசு பெற்ற ஆர்ச் பிஷப் தேஷ்மண்ட் கூறினார்.

## பரிசு பெற்ற மற்றவர்கள்

| | |
|---|---|
| இலக்கியம்— | டோனி மாரிசன். அமெரிக்கப் பெண் எழுத்தாளர் |
| மருத்துவம்— | டாக்டர் ரிச்சர்ட் ஜே. ராபர்ட் இங்கிலாந்து டாக்டர் பிலிப். |
| " | ஏ ஷார்ப் (அமெரிக்கா) |
| இயல்பியல்— | ரஸ்ஸல் ஏ ஹால்ஸ் (பிரான்ஸ்), ஜோசப் எச். டெய்லர் (அமெரிக்கா) |
| வேதியல்— | க்யாரி. பி. மில்லன் (அமெரிக்கா) மைக்கேல் ஸ்மித் (கனடா) |
| பொருளியல்— | ராபர்ட் டபிள்யு போஜல் (பிரான்) டக்ளஸ் சி. நார்த்(அமெரிக்கா) |



# மர்ம வேலைக்காரி

சரிதா ஏழை வீட்டுப் பெண். அவளது சிநேகிதி சுமதியோ பணக்காரி. ஆனால் இருவரும் ஆருயிர்த் தோழிகள். ஏழையானாலும் சரிதா எதுவும் யாரிடமும் கேட்க மாட்டாள்.

ஒரு நாள் சுமதியின் வீட்டிற்கு ஒரு நகை வியாபாரி வந்தான். அவன் பல புதுவித நகைகளைச் சுமதியின் தந்தையிடம் காட்டினான். அவரும் அவற்றைக் கண்டு அழகாக இருந்த நான்கு நகைகளை வாங்கிக் கொள்வதாகக் கூறினார். வியாபாரியோடு வந்த வேலையாள் வடிவேலன் அவற்றை எடுத்துக் கட்டிக் கொடுத்தான்.

வடிவேலன் இளைஞன், அழகன், சுறுசுறுப்பாக இயங்குபவன். அவனைக் கண்ட சுமதி தன்மனதில் அவனையேதான் மணப்பது எனத் தீர்மானித்துக் கொண்டாள். ஆனால் அவன் எண்ணத்தை அறிந்து கொள்ள அவள் தானே அவனிடம் நேராகக் கேளாமல் தன் சிநேகிதி சரிதாவைத் தூது அனுப்பினாள்.

சரிதாவிடமிருந்து விவரம் அறிந்த வடிவேலன் "நான் உன் சிநேகிதியை மணந்து கொள்ள விரும்பவில்லை. உன்னையே மணந்து கொள்கிறேன்" என்றான்.

சரிதாவும் வடிவேலன் கூறியதை சுமதியிடம் தெரிவித்தாள்.

சுமதிக்குக் கோபம் வந்தாலும் தன்னால் எதுவும் செய்ய முடியாதெனக் கண்டு அவள் கூறியபடியே செய்வதாகக் கூறி அனுப்பினாள். விரைவிலேயே சரிதாவிற்கும் வடிவேலனுக்கும் திருமணம் நடந்தது. சில நாட்களுக்குப் பின் சுமதியும் ஒரு பணக்காரனை மணந்து கொண்டாள்.

—சிவனார் செல்வன்



சில ஆண்டுகள் கழிந்தன. சரிதா சங்கனூரில் இருப்பதாக சுமதி கேள்விப்பட்டாள். தன்னை நிராகரித்த வடிவேலன் சரிதாவுடன் எப்படிக் குடித்தனம் நடத்துகிறான் என்று காண அவள் விரும்பினாள். எனவே அவள் தன் வேலைக்காரியை அழைத்துக் கொண்டு சங்கனூருக்குச் சென்றாள்.

சுமதியைக் கண்ட சரிதா பெரு மகிழ்ச்சி கொண்டு அவளை வரவேற்றாள். சுமதியும் அங்கு வடிவேலனும் சரிதாவும் பாங்காகக் குடித்தனம் நடத்துவதைக் கண்டு பொறுமிப் போனாள். அவள் மனதில் பொறாமையே அதிகரித்தது.

மறுநாள் சுமதி சரிதாவிடம் அனுதாபம் காட்டுபவள்போல "நீயே வீட்டு வேலை எல்லாம் செய்கிறாயே, வேலைக்காரி இல்லையா?" என்று குத்தலாகக் கேட்டாள். சரிதாவோ "இல்லாமல் என்ன! அவள் உன் கண்ணில் படாமல் வேலைகளை செய்து விட்டு போய்விடுவாள். நீயே என் வீட்டைப் பார், எவ்வளவு சுத்தமாக இருக்கிறது!" என்றாள்.

சுமதியும் 'அப்படியா!' எனக் கூறி இரண்டு மூன்று நாட்கள் அந்த வேலைக்காரியைப் பார்க்க முயன்றும் முடியாது போயிற்று. அவள் தன்ஊருக்குக் கிளம்பினாள். அப்போது சரிதா ஐந்தாறு புடவைகளைக் காட்டி "இவற்றில் ஒன்றை என் நினைவாக எடுத்துக் கொள்" என்றாள்.

சுமதியோ மிடுக்காக "இந்த மாதிரிப் புடவையை நான் என் வேலைக்காரிக்குத்தான் கொடுப்பேன். அதனால் அவளையே தேர்ந்தெடுத்துக் கொள்ளச் சொல்கிறேன்." என்று கூறி தன் வேலைக்காரியைக் கூப்பிட்டாள். சரிதா அதைக் கேட்டு திகைத்துப் போனாலும் எதுவும் பேசவில்லை. சுமதி தன் ஊருக்குத் திரும்பிச் சென்றாள்.

சில நாட்களுக்குப் பின் சரிதா

தன் பிறந்தவீட்டிற்கு வந்தாள். சுமதி அவளைக் காண அவள் வீட்டிற்கு வந்து "நீ ஊருக்குப் போகுமுன் என் வீட்டிற்கு வந்து சாப்பிட வேண்டும்" என அழைத்தாள். அப்போது சரிதா "நான் என்னுடன் என் வேலைக்காரியையும் அழைத்து வரலாம் அல்லவா?" என்று கேட்டாள்.

சுமதியும் "ஆகா! அழைத்து வாயேன்" என்று கூறினாள். சரிதாவும் சங்கனூருக்குக் கிளம்புவதற்கு ஒரு நாள் முன் சுமதியின் வீட்டிற்குச் சென்றாள். அப்போது சுமதி "உன் வேலைக்காரி வரவில்லையா?" என்று கேட்கவே சரிதாவும் "உன் வீட்டிற்கு அவளை எப்படி அழைத்து வருவது என்று தயங்கித்தான் அழைத்து வரவில்லை" என்றாள். அதுகேட்டு சரிதா தன் அந்தஸ்தை உயர்வாக சரிதா நினைக்கிறாள் என எண்ணி மகிழ்ந்தாள்.

சாப்பாடு முடிந்ததும் சுமதி ஐந்தாறு சரிகைக் புடவைகளை எடுத்து வந்து "இவற்றில் ஒன்றை என் பரிசாக எடுத்துக் கொள்" என்றாள். சரிதாவும் ஒன்றை எடுத்துக் கொண்டு "நான் கொடுத்த புடவையை நீ உன் வேலைக்காரிக்குக் கொடுத்ததுபோல நீ கொடுத்த இந்த புடவையை நான் என் வேலைக்காரிக்குக் கொடுப்பது தான் முறை. அவளுக்கே நான்



கொடுத்துவிடுகிறேன்." என்றாள்.

சுமதியோ "இவ்வளவு சரிகை போட்ட பட்டுப் புடவையையா வேலைக்காரிக்குக் கொடுக்கிறாய்? இப்படிப்பட்ட புடவையை என் போன்றவர்கள்தான் உடுத்திக் கொள்வார்கள்" என்றாள். அதற்கு சரிதா "நான் என் வேலைக்காரியை எனக்குச் சமமாக நடத்துகிறேன். எனவே நான் உடுப்பது போன்ற புடவையை அவளுக்குக் வாங்கிக் கொடுக்கிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட சுமதியின் மனம் மிகவும் சங்கடப்பட்டது. சரிதா பதிலடி கொடுத்துவிட்டாள் என

எண்ணி வேதனைப்பட்டாள். ஒரு மாதம் கழிந்தபோது சுமதியின் கணவன் சங்கனுருக்குப் போகவே அவளும் அவனுடன் சென்றாள். அவள் கணவன் அவ்வூரில் தன் வேலையை கவனிக்கப் போகவே சுமதி சரிதாவின் வீட்டிற்குச் சென்றாள்.

அவள் சரிதாவின் வீட்டுக் கதவைத் தட்டியதும் சரிதாவே வந்து கதவைத் திறந்தாள். அவள் துணிகளைத் துவைத்துக் கொண்டிருக்கும்போதே அதைப் பாதியில் விட்டுவிட்டு வந்தாள் என்பது சுமதிக்குத் தெரிந்தது. சரிதாவின் புடவை நனைந்தும் அவளது தலை கலைந்தும் இருப்பதைக் கண்டாள். மேலும் அவள் உடுத்தி இருந்தது தான் கொடுத்த பட்டுப் புடவையே எனவும் சுமதி கண்டாள்.

சுமதியும் "இன்றும் உன் வேலைக்காரி வரவில்லையா? அவளைப் பார்க்கலாம் என்று வந்தேன்.'' என்றாள் அப்போது சரிதா'' நீ கொடுத்த புடவையை நான் கட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்து இன்னமும் நீ புரிந்து கொள்ளவில்லை? நான்தான் அந்த வேலைக்காரி. நம் வேலையை நாமே செய்து கொள்வது இழிவே இல்லை. நமக்குக் கை கால்கள் திடமாக இருக்கையில் ஏன் ஓடியாடி நம் வேலைகளை நாமே செய்து கொள்ளக் கூடாது?'' என்றாள்.

அதுகேட்டு சுமதி கல்லாகச் சமைந்தாள். பிறகு அவள் சரிதாவிடம் "சரிதா! நீ எவ்வளவு உயர்ந்தவள்! பொறாமை கொண்டு உன்னை நான் கேவலமாகப் பேசினேன். மரியாதைக் குறைவாக நடத்தினேன். ஆனால் இப்போதுதான் உண்மையை உணர்ந்தேன். இனி முன்போல உன்னுடன் சகஜமாகப் பழகி உன்னைப் போலவே என் வேலைகளை நானே செய்து கொள்வேன்'' எனக் கூறினாள்.





# நற்சான்றிதழ்கள்

குமரன் என்ற குடியானவனின் மகன் இராமநாதன் என்பவரின் கடையில் கணக்கர் வேலை காலியாக இருக்கிறது என்று கேள்விப்பட்டு அவரைக் காணச் சென்றான். அவரும் "நீ ஆயிரம் ரூபாய் ஜாமீன் கட்ட வேண்டும், அல்லது நீ நாணயமானவன் என இவ்வூர் இரு பிரமுகர்கள் சான்றிதழ்கள் கொடுத்து ஆயிரம் ரூபாய்க்கு உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுக்க வேண்டும்; இப்படி செய்தாலே உனக்கு இந்த வேலை'' என்றார்.

குமரனும் சற்று யோசித்து "ஐயா! இன்று மாலை கடை மூடியதும் என்னோடு வாருங்கள். நீங்கள் கேட்ட தொகையையோ அல்லது உறுதி மொழிப் பத்திரங்களையோ வாங்கிக் கொடுக்கிறேன்'' என்றான்.

அன்று மாலை குமரன் இராமநாதனை அழைத்துக் கொண்டு வட்டிக் கடை வயிரவன் வீட்டிற்குப் போனான். அவன் அவரிடம் தான் காரணத்தைக் கூறி ஆயிரம் ரூபாய் கடன் கேட்டான். வயிரவனும் "நீ நல்லவன், நேர்மையானவன், பொய் பேசாதவன் என்று எனக்குத் தெரியும். நீ என் வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் தான் இருக்கிறாய். ஆனால் உன்னால் எப்படிக் கடனை வட்டியோடு திருப்பிக் கொடுக்க முடியும்? எனக்கு உன் பொருளாதார நிலை தெரியும் எனவே கடன் கொடுக்க முடியாது'' என்று கூறிவிட்டார்.

குமரன் இராமநாதனை அழைத்துக் கொண்டு வெளியே வந்து முத்துசாமி என்பவரின் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

—ரேணுகா ரவி

முத்துசாமியும் குமரன் சொன்னதைக் கேட்டு விட்டு "சிறுவயது முதல் உன்னை நான் அறிவேன். நீ என் மகனின் நண்பன். தப்பு தண்டாவிற்குப் போகதவன், நேர்மையானவன் என்றெல்லாம் எனக்குத் தெரியும். ஆனால் அதற்காக ஆயிரம் ரூபாய்க்கு உறுதி மொழிப் பத்திரம் எழுதிக் கொடுக்கச் சொல்கிறாயே. அதுமட்டும் முடியாது" என்று கூறி அனுப்பி விட்டார்

குமரன் இராமநாதனை அழைத்துக் கொண்டு மாணிக்கம் என்ற மற்றொரு பிரமுகரின் வீட்டிற்கு சென்றான். அவரும் குமரன் சொன்னதைக் கேட்டு விட்டு "இதோ பார் குமரா, உன் குடும்பத்தவரை நான் நன்கு அறிவேன். நீ மிகவும் நல்லவன், பொய் புரட்டு என்றெல்லாம் இல்லாதவன் என என் கணக்குப் பிள்ளை அவ்வப் போது சொல்லி வருவதையும் கேட்டுத் தான் வருகிறேன். அதற்காக என்னை ஆயிரம் ரூபாய்க்கு உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுக்கச் சொல்கிறாயே. இது எப்படி முடியும்?" என்று கூறித் தன்னால் முடியாது என்று கூறினார்.

குமரன் நம்பிக்கை இழந்தவனாய் இராமநாதனுடன் வெளியே வந்து "நான் எவ்வளவு முயன்றும் நீங்கள் கேட்டதைக் கொடுக்க முடியாமல் போய்விட்டது. இது என் துரதிரஷ்டம்" என்றான்.

இராமநாதனும் "கவலைப் படாதே. உன்னைப் பற்றிய நற்சான்றிதழ்கள் தான் இந்த மூவரிடமிருந்தும் கிடைத்து விட்டனவே. அவர்கள் எழுதித்தான் கொடுக்கவில்லை என்றாலும் வாய் வார்த்தையால் உன்னைப் பற்றி அறிவித்து விட்டார்களே. அது போதும் எனக்கு. நாளையே நீ வேலைக்கு வந்துவிடு" என்றார். குமரன் மகிழ்ந்து போனான்.






# 9

*[அதிசய மலர்களை எடுத்துக் கொண்டு உத்தமன் ராட்சஸ மிருகத்தைத் தேடிக் கொண்டு செல்கையில் நாகபுரம் என்ற புதிய நாட்டை அடைந்தான். அங்கு மலைச் சாதித் தலைவன் காயாம்புவைச் சந்திக்கவே அவன் உத்தமனைத் தன் மன்னனிடம் அழைத்துச் சென்றான். அம்மன்னன் உத்தமனின் முயற்சியைப் பாராட்டி அவனுக்கு உதவ சில வீரர் களை அனுப்புவதாகக் கூறினான். அவனை இளவரசி மல்லிகா காணவிரும்பவே அவன் அவளைச் சந்திக்கச் சென்றான். —பிறகு]*

உத்தமனை அழைத்துச் சென்ற வீரன் அவனை ஒரு அழகிய அறையில் உட்கார வைத்துவிட்டு அரசு குமாரியிடம் அவன் வந் திருப்பதைத் தெரிவிக்கச் சென் றான். அவன் அறைச் சன்னல் வழியாக வெளிப்புற தோட்டத் தின் அழகை ரசித்துக் கொண்டிருக் கையில் அரசகுமாரியும் அங்கு வந்தாள்.

அவள் உத்தமனைக் கண்டு "வந்துவீட்டீர்களா? எனக்கு மலர் கள் விருப்பம் என்பதுபோல உங்களுக்கும் பிடிக்கும் என்பது தெரிகிறது. அந்த மலர்களை பத் திரமாக வைத்திருக்கிறேன். அந்த மலர்களைப் பற்றி விவரமாகக் கூறுகிறீர்களா?" என்று கேட் டாள்.



உத்தமனும் சட்டென 'இதுவும் மற்ற மலர்களைப்போலத்தான். வேறு விசேஷமாக எதுவும் சொல்வதற்கு இல்லை'' என்று மழுப்பினான்.

மல்லிகாவோ ''நீங்கள் இதைப் பற்றி என் தந்தையிடம் கூறிக் கொண்டிருந்ததை முழுவதுமாகக் கேட்காவிட்டாலும் ஓரிரு வார்த்தைகள் மட்டும் என் காதில் விழுந்தது. இந்த மலர்களின் நறுமணம் அரண்மனை எங்கும் வீசவே நான் அது எங்கிருந்து வருகிறது எனக் காண வந்தேன். அப்போது என் தந்தையுடன் நீங்களும் காயாம்புவும் பேசிக் கொண்டிருந்ததை சற்று தூரத்தில் மறைவில் நின்று கேட்டேன். தெளிவாகச் சொற்கள் காதில் விழாத போதிலும் ராட்சஸ மிருகம், சாபம் என்றெல்லாம் நீங்கள் சொன்னதைக் கேட்டேன். சாபம் யாருக்கு? மலருக்கா, ராட்சஸ மிருகத்திற்கா?'' என்று கேட்டாள்.

உத்தமனும் உடனே ''ஆமாம் சாபம் ராட்சஸ மிருகத்திற்குத் தான். அதற்கு இந்த மலர்கள் என்றால் மிகவும் பிடிக்கும்'' என்றான். மல்லிகாவும் ''ஓ! அதனால் தான் இந்த மலரைக் கொண்டு அந்த மிருகத்தைப் பிடிப்பது என்று கிளம்பினீர்களோ?'' என்று கேட்டாள்.

உத்தமனும் ''மலர் விஷயம் இருக்கட்டும். என்னை எதற்காக வரச் சொன்னீர்கள் என்பதைக் கூறுவீர்களா?'' என்று கேட்டான். மல்லிகாவும் ''நீங்கள் ராட்சஸ மிருகத்தை அடக்கக் கிளம்பியது உங்களது துணிச்சலையும் வீரத்தையும் காட்டுகிறது. இங்கு ராட்சஸ குணம் படைத்த மனிதன் ஒருவன் இருக்கிறான். அவனை அடக்க உங்கள் உதவி தேவை'' என்றாள்.

உத்தமனும் ''அப்படியா! இந்த நாட்டில் எதிரிகளின் பயம் என்பதே இல்லை என்று காயாம்பு கூறினாரே'' எனவே மல்லிகாவும் ''அவர் சொன்னது உண்மையே. இந் நாட்டிற்கு எதிரிகள் வெளி



நாட்டவர் அல்ல. ஆனால் எங்கள் மத்தியிலேயே அவன் இருக்கிறான்'' என்றாள்.

உத்தமனும் ''யார் அவன்?'' என்று கேட்கவே மல்லிகாவும் ''வேறு யாருமில்லை. என் தாய் மாமன் நாகசிம்மன்தான். அவன் இப்போது ஒரு படைப்பிரிவின் தளபதி. அவன் சேனாதிபதி பதவி தனக்கு வேண்டும் என்று என் தாயின் வாயிலாக என் தந்தையிடம் தெரிவித்திருக்கிறான். என் தந்தையோ அது முடியாது எனக் கூறிவிடவே அவன் எல்லோரிடமும் ஆத்திரத்துடன் 'நான் நினைத்தால் சேனாதிபதியை மட்டுமல்ல, அரசனையே தீர்த்துக்கட்டி விடுவேன்.'' என்று கூறிக் கொண்டு திரிகிறான். இதை அறிந்த என் தந்தை அவன் அரண்மனைக்குள் அடி எடுத்து வைக்கக் கூடாதெனக் கூறி அவனை இந்நாட்டு எல்லைப்புறப் பகுதிக்கு மாற்றிவிட்டார். என்னையும் என் தாயையும் எச்சரிக்கையாக இருக்கும்படி என் தந்தை கூறி இருக்கிறார்'' என்றாள்.

உத்தமனும் ''தற்போதைய சேனாதிபதி யார்?'' எனக் கேட்கவே மல்லிகாவும் ''துர்ஜெயன் என்பவன். ஆண் வாரிசே இல்லாததால் என் தந்தை தனக்குப் பின் என்னை இந்நாட்டில் அரசியாக்க விரும்புகிறார். நாகசிம்மன் ஏதாவது சதி செய்வானோ என அவரும் என் தாயும் பயப்படுகிறார்கள்'' என்றாள்.

உத்தமனும் ''மக்கள் உங்கள் பக்கம் இருக்கையில் நாகசிம்மனால் எதுவும் செய்துவிட முடியாது'' என்றான். மல்லிகாவும் ''ஆனால் நாகசிம்மனின் நடவடிக்கைகளைப் பற்றி ஒற்றர்கள் என் தந்தைக்குத் தகவல்கள் அனுப்பி இருக்கிறார்கள். அவற்றைக் கொண்டு பார்த்தால் அவன் தானே அரசனாக ஏதோ சதி செய்து கொண்டிருக்கிறான் என்பது தெரிகிறது. இதைச் சொல்லி நீங்கள் மேலும் சில நாட்கள் இங்கே இருக்க வேண்டும் எனக் கேட்டுக்

கொள்ளத்தான் உங்களை வரச் சொன்னேன்'' என்றாள்.

உத்தமனும் "ஆனால் நான் வெகு தூரம் போய் ஒரு முக்கியமான வேலையைச் செய்ய வேண்டுமே!'' எனவே மல்லிகாவும் "அது எனக்கும் தெரியும். உங்களிடம் இதைச் சொன்ன காரணம் சமயத்தில் உங்கள் உதவி தேவைப்படும் என்பதற்காகத்தான். மேலும் நான் இதை உங்களிடம் கூறினேன் என்பது ரகசியமாகவே இருக்கட்டும்'' என்றாள்.

உத்தமனும் அந்த வாக்குறுதியை அளித்துவிட்டுத் தன் விடுதிக்குத் திரும்பிச் சென்றான். அங்கு அவன் வருகைக்காகக் காத்திருந்த காயாம்பு உத்தமனிடம் பேசுவதற்கு முன் அவனே "இளவரசி அதிசய மலர் பற்றிக் கேட்டாள். நான் அதற்குள்ள சாபத்தை மறைத்துவிட்டு மற்ற விவரங்களை எல்லாம் கூறினேன்'' என்றான்.

காயாம்புவும் "ரொம்ப நல்லது. எங்கே சாபம் பற்றி அவளிடம் கூறிவிடுவாயோ என்று பயந்து கொண்டிருந்தேன்'' என்றான். மறுநாள் காலை ஒரு வீரன் வந்து மன்னன் அவர்கள் இருவரையும் அழைத்து வரச் சொன்னதாகக் கூறிக் கூட்டிக் கொண்டு சென்றான்.

அவர்களைக் கண்ட மன்னன்



"உத்தமனுக்கு உதவ தளபதி நாகசிம்மனோடு சில வீரர்களையும் அனுப்பத் தீர்மானித்திருக்கிறேன். நாகசிம்மன் இப்போது நாட்டின் எல்லைப் புறத்தில் இருக்கிறான். அவனை வரச் சொல்லி இருக்கிறேன். அவன் இங்கே வந்து சேர மூன்று நாட்கள் ஆகலாம். அதுவரை உத்தமன் இங்கேயே இருக்கட்டும். காயாம்பூ! நீ வேண்டுமானால் உன் ஊருக்குப் போகலாம்'' என்றான்.

காயாம்புவும் மன்னனிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினான். தனியே விடப்பட்ட உத்தமன் சாப்பிட்ட பிறகு அந்த ஊரைச் சுற்றிப் பார்க்கலானான்.



அங்குள்ள மாளிகைகளையும் கடைகளையும் மக்களையும் கண்டு மக்கள் சுகமாக வாழ்கிறார்கள் என்று தெரிந்து கொண்டான். அவன் மற்ற இரண்டு நாட்களிலும் பொழுதைப் போக்க நகரின் பல பகுதிகளையும் பார்த்து வந்தான்.

மூன்றாவது நாள் மாலை ஒரு வீரன் வந்து உத்தமனை இளவரசி முன் அழைத்துச் சென்றான். அவளும் "என் மாமன் வரப் போகிறான். அவன் இந் நாட்டைக் கவர சதி செய்து கொண்டிருக்கிறான். அவன் உங்களோடு செல்லப் போகிறான். ஏதாவது விஷமச் செயலில் ஈடுபட்டால் உடனே தெரிவியுங்கள்" என்றாள்.

உத்தமனும் "ஓ! அப்படியே செய்கிறேன். நான் மாணிக்கபுரிக்குப் போகுமுன் இங்கு வந்து சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டுப் போகிறேன்" என்றான். அதன் பிறகு அவன் மல்லிகாவிடம் விடை பெற்றுக் கொண்டு தன் விடுதிக்கு வந்தான்.

அன்றே வடக்கு எல்லையிலிருந்து வந்த நாகசிம்மன் சேனாதிபதியைக் கண்டான். அவன் பணிவுடன் "என்னை இங்கே வரச் சொல்லி பணித்தீர்களே. அது எதற்கு என்று நான் அறிந்து கொள்ளலாமா?" என்று கேட்டான்.

சேனாதிபதி துர்ஜெயனும் "மாணிக்கபுரியிலிருந்து உத்தமன் என்ற வாலிபன் வந்திருக்கிறான். அவன் ஏதோ ஒரு முக்கியமான வேலையை ஏற்றுப் போய்க் கொண்டிருக்கிறான். அவனுக்கு உதவ நீ சில வீரர்களுடன் செல்ல வேண்டும் என்பது மன்னரின் கட்டளை" என்றான்.

நாகசிம்மனும் "உத்தமன் தான் சூரப்புலி என்று உலகமே அறியுமே. அவனுக்கு நான் உதவப் போவதா?" என்று கேலியாகச் சிரித்தவாறே கேட்டான். துர்ஜெயனோ "அவன் என்னவோ தனியாகவே போவதாகக் கூறினான். ஆனால் மன்னர் தாம்

உன்னைச் சில வீரர்களோடு அவனுக்குத் துணையாக இருக்க அனுப்புவதாகக் கூறினார். அவன் ராட்சஸ மிருகத்தைப் பிடிக்கப் போய்க் கொண்டிருக்கிறேன். அது மாணிக்கபுரத்திற்குத் தொல்லைகளைக் கொடுத்து வருகிறதாம். அதற்கு அதிசய மலர் என்றால் மிகவும் பிரியமாம். அதனால் அந்த மலர்களை எடுத்துக் கொண்டு கிளம்பி வந்தான்'' என்றான்.

நரசிம்மனும் "ராட்ச மிருகத்தை ஒரு இளம் வயதினன் பிடிக்கப் போகிறான் என்பதை நீங்கள் நம்பிவிட்டீர்களா?'' என்று கேட்டான். துர்ஜெயனும் "மாணிக்கபுரியிலிருந்து சிரமப்பட்டு இவ்வளவு தூரம் அவன் வந்தான் என்றால் அவன் சொல்வதை நம்பத்தான் வேண்டி இருக்கிறது. மேலும் இதுபற்றி நாம் ஆராயவும் முடியாது. அரச கட்டளை எதுவோ அதன்படி நாம் நடந்தே தீர வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்ட நாகசிம்மன் எதுவும் பதில் பேசாமல் யோசிக்கலானான். அப்போதைக்கு எதிர் வார்த்தை ஆடக்கூடாதென அவன் தீர்மானித்தான்.

நாகசிம்மனும் "சரி. கட்டளைப்படி நடக்கிறேன். நான் எப்போது உத்தமனைக் காண வேண்டும்?'' என்று கேட்டான். சேனாதிபதியும் "நாளை இங்கே இதே நேரத்திற்கு வந்துவிடு'' என்று கூறி அவனை அனுப்பினான்.



மறுநாள் காலை சேனாதிபதியை உடனே மன்னன் அழைப்பதாக ஒரு வீரன் வந்து கூறவே சேனாதிபதியும் உடனே சென்றான். அங்கு மன்னனும் இளவரசியும் கவலை தோய்ந்த முகத்துடன் இருப்பதைக் கண்டான். அவன் மன்னனிடம் "அரசே! என்ன விஷயம்? ஏன் கவலையுடன் இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

"இளவரசி வைத்திருந்த அதிசய மலர்கள் திடீரென்று காணாமல் போய்விட்டன. யார் அவற்

றைத் திருடிக் கொண்டு போயிருப்பான்? அவற்றின் நறுமணம் அரண்மனை முழுவதும் பரவிய போதிலும் யார் எடுத்துப் போனான் என்பதை யாராலும் சொல்ல முடியவில்லை. ராணி தான் அந்த மலர்கள் திருட்டுப் போனதைக் கண்டுபிடித்தாள். இதை யார் செய்தது என்று கண்டுபிடித்தாக வேண்டும்'' என்றான் மன்னன்.

சேனாதிபதியும் "இது வெளியிலிருந்து வந்த திருடனின் வேலை இல்லை. அரண்மனையை நன்கு அறிந்த உள்ளாள் ஒருவனே இதை செய்திருக்க வேண்டும். அரண்மனைக்குள் ராட்சஸ மிருகம் வந்திருக்க முடியாதே'' என்று கூறினான். மன்னன் சட்டெனக் குறுக்கிட்டு "இப்போது மலர் என்னவாயிற்று என்று கண்டுபிடிக்க வேண்டுமே யொழிய அது எப்படிப்பட்டது என்றெல்லாம் பேசிக் கொண்டிருக்க வேண்டாம்'' என்றான்.

மன்னன் ஏன் அவ்வாறு சொல்கிறான் என்பது சேனாதிபதிக்குப் புரிந்துவிட்டது. மலரைக் காண ராட்சஸ மிருகம் வரும் என்பதனையும், அம் மலருக்குள்ள சாபம் பற்றியும் இளவரசி அறிந்து கொள்ளக் கூடாது என மன்னன் விரும்புவதை அறிந்து கொண்டான்.

சேனாதிபதியும் "இப்போதே அதைக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்கிறேன். நேற்று அரண்மனைக்குள் யார்யார் வந்தார்கள் என்று பார்க்கிறேன். நாகசிம்மன்கூட வடக்கு எல்லையிலிருந்து நேற்றுத்தான் வந்தான். அவன் உத்தமனுடன் செல்லவும் சம்மதித்து விட்டான்'' என்றான்.

"நாகசிம்மன் நேற்றே வந்தானா? ஓ! அதனால்தான் இப்படியெல்லாம் நடக்கிறதா? சரி. முதலில் அதிசய மலர்களை கண்டுபிடியுங்கள். அதன் பிறகு உத்தமன் இங்கிருந்து போவது பற்றி யோசிப்போம்'' என்று மன்னன் கூறினான். (தொடரும்)





# மூன்று மோதிரங்கள்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ இந்த பயங்கர இரவில் ஏனோ இப்படி விடாப்படியாய் இந்த செயலில் இறங்கி இருக்கிறாய். நீயோ இதை நிறுத்தப் போவதில்லை. எனவே உனக்குச் சிரமம் தெரியாதிருக்க லதாங்கி என்ற அரசகுமாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஜெயபுர நாட்டின் ஒரு மலைச் சரிவில் ஒரு சிறு கிராமத்தில் கேசவன், மாதவன், கோவிந்தன், என்ற மூன்று ரஜபுத்திர




இளைஞர்கள் இருந்தார்கள். மூவரும் பிரியாமல் எங்கு சென்றாலும் ஒன்றாகவே செல்வது வழக்கம்.

ஒரு நாள் மாலை மூவரும் ஒரு ஆலயத்தில் கூடினார்கள். அப்போது கேசவன் "நம் பெற்றோர் நமக்கு எந்த வேலையும் கொடுப்பதில்லை. வேளா வேளைக்குச் சாப்பிட்டுவிட்டு சும்மா இருக்கப் பிடிக்கவே இல்லை. ஏதாவது உபயோகமான வேலையை நாம் செய்ய வேண்டும்" என்றான்.

அப்போது கோவில் குருக்கள் அவர்களுக்கு பிரசாதம் கொடுக்க வந்தார். அவர் அம் மூவரும் பேசியதைக் கேட்டு கொண்டிருந்தார். அவர் "நீங்கள் மூவரும் நினைப்பது சரியே. அறிவை நல் வழியில் பயன்படுத்தாவிட்டால் அது கெட்டு விடும். சுய நலம் கருதாமல் பிறருக்குப் பயன்படும்படிச் செய்யும் செயலே மகத்தானது. இங்கே அருகிலுள்ள காட்டில் ஒரு புலி இருந்து மக்களைக் கொன்றும் பயமுறுத்தியும் வருகிறது. அதைக் கொன்று சுற்றுப்புற கிராம மக்களுக்கு நன்மைப் புரியுங்கள்" என்றார்.

மூவரும் "இது தானா? இன்றே அதைக் கொன்று வருகிறோம்" எனக் கூறி மறுநாள் காட்டை நோக்கிச் சென்றார்கள். மத்தியான்னம்வரை அவர்கள் புலியைத் தேடியும் அது அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அவர்கள் பசியைத் தணித்துக் கொள்ள அங்கு கிடைத்த கிழங்குகளையும் பழங்களையும் சாப்பிட்டார்கள். அருகே ஓடிக் கொண்டிருந்த ஆற்று நீரை அள்ளிப் பருகினார்கள். அப்போது அருகிலிருந்த மலைக் குகையிலிருந்து யாரோ அலறும் சத்தம் கேட்டது.

அவர்கள் மூவரும் குகையை நோக்கி ஓடினார்கள். அப்போது ஒரு பெரிய பாம்பு சீறிக் கொண்டு அக்குகையிலிருந்து வெளியே வந்தது. மூவரும் தம் வாட்களை உருவி அதனைத் துண்டு துண்டாக வெட்டிப் போட்டார்கள்.

அப்போது குகைக்குள் யாரோ ஒரு மனிதன் முனகிக் கொண்டிருப்பதைக் கேட்டு அவர்கள் அந்த குகைக்குள் சென்றார்கள்.

அங்கு ஒரு சாது துடிதுடித்து உயிர்போகும் நிலையில் இருப்பதை அவர்கள் கண்டார்கள். கேசவன் அவரிடம் "சுவாமி! தாங்கள் யாரோ? இங்கே எவ்வளவு காலமாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

அந்த சாதுவும் மெல்லிய குரலில் "நான் என் குருவை ஏமாற்றி அவர் வைத்திருந்த அரிய சக்தி வாய்ந்த மூன்று மோதிரங்களை அவருக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு இமய மலையிலிருந்து இங்கே ஓடி வந்துவிட்டேன். அவற்றைக் கொண்டு ராஜபோகம் அனுபவிக்கலாம் என்று மனக் கோட்டை கட்டினேன். ஆனால் என்னை இப்போது ஒரு கொடிய விஷப்பாம்பு தீண்டிவிட்டது. நான் இறக்கத்தான் போகிறேன். அதற்கு முன் அந்த மூன்று மோதிரங்களையும் உங்களுக்குக் கொடுக்கிறேன். இந்தப் பச்சைக் கல் மோதிரத்தை வைத்திருப்பவனுக்கு அரிதான யோசனைகள் தோன்றும். இந்த சிவப்புக் கல் மோதிரத்தை வைத்திருப்பவனுக்கு அந்த யோசனைகளைச் செயல்படுத்தும் வழி தோன்றும். இந்த நீலக்கல் மோதிரத்தை வைத்திருப்பவன் அந்த வழியைச் செயல்படுத்தும் சக்தி பெற்றிருப்





தீர்மானித்தார்கள்.

மறுநாளே அவர்கள் தலைநக ருக்குப் போய் மன்னனைக் கண் டார்கள். அவர்கள் தம்மிடமுள்ள மோதிரங்களை அவரிடம் கொடுத்து அவற்றின் அரிய சக்திகளைக் கூறினார்கள். மன்னனும் அவர் களைப் பாராட்டி அம்மோதிரங் களை வாங்கிக் கொண்டான். அவர்கள் மூவரையும் அவன் தன் அரண்மனையில் சில நாட்கள் தங்கி இருக்கம்படிக் கூறி அவர் கள் தங்க வசதியும் செய்து கொடுத் தான்.

மன்னன் அந்த அதிசய மோதி ரங்களை எடுத்துப் போய் தன் ஒரே மகளான லதாங்கியிடம் காட்டி "இந்தப் பச்சைக் கல் மோதி ரத்தை கேசவன் என்பவன் கொடுத்தான். இதை அணிந்து கொண்டால் அரிய யோசனை கள் தோன்றுமாம். இந்த சிவப்புக் கல் மோதிரத்தை மாதவன் கொடுத்தான். இதை அணிபவ னுக்கு அந்த அரிய யோசனை களை நடைமுறையில் கொண்டு வருவதற்கான வழி தெரியுமாம். இந்த நீலக்கல் மோதிரத்தை கோவிந்தன் கொடுத்தான். இதனை அணிபவனுக்கு அந்த யோசனை களை அமல்படுத்தும் வழியில் சென்று செயல்படுத்தும் சக்தி கிடைக்குமாம். எப்படி இருக்கின் றன இந்த மோதிரங்கள்?" என்று

பான். உங்கள் மூவருக்கும் ஆளுக்கு ஒரு மோதிரம் கொடுக்கிறேன்" எனக் கூறிப் பச்சைக் கல் மோதி ரத்தை கேசவனுக்கும் சிவப்புக்கல் மோதிரத்தை மாதவனுக்கும் நீலக் கல் மோதிரத்தை கோவிந் தனுக்கும் கொடுத்துவிட்டு உயிர் நீத்தார்.

அவர்கள் அந்த சாதுவின் உடலை எரித்துவிட்டு தம் ஊருக்கு வந்தார்கள். அவர்கள் நன்கு யோசித்து தாம் பெற்ற மோதிரங் கள் தம்மிடம் இருப்பதைவிடத் தம் மன்னரிடம் இருந்தால் மக் களுக்குப் பல நன்மைகள் ஏற்படும் என்று முடிவுக்கு வந்து அவற்றை மன்னனிடம் கொடுப்பது என்று

கேட்டான்.

லதாங்கியும் "ஆகா! அருமை யான மோதிரங்களே. நான் அந்த மூவரையும் காண விரும்புகி றேன். மக்கள் நலனில் அக்சரை கொண்ட அவர்கள், நாடாசை கொண்டு என்னை மணக்க விரும் பும் அரச குமாரர்களைவிட எவ் வளவோ மேல். இதுவரை நீங்கள் கூறிய அரச குமாரர்களை எல் லாம் புறக்கணித்து வந்தேன். இப் போது மக்களின் நலனைக் கருதும் மூவர் வந்திருக்கிறார்கள். அவர் களில் ஒருவரை நான் என் கணவ ராகத் தேர்ந்தெடுக்கிறேன்" என் றாள்.

மன்னனும் மகிழ்ந்துபோய் "பேஷ் பேஷ். இப்போதாவது நீ ஒருவனை மணம் செய்து கொள்வ தாகக் கூறினாயே, அதுவே போதும். வந்த அரச குமாரர்களை எல்லாம் ஏதாவது ஒரு குறை கூறித் தட்டிக் கழித்தாய். போகட்டும். இந்த மூவரும் க்ஷத்திரியர்களே. பார்க்க ராஜகுமாரர்கள்போல வாட்ட சாட்டமாக இருக்கிறார்கள். இவர்களில் நீ யாரைத் தேர்ந்தெடுத் தாலும் நான் என் சம்மதத்தை அளிக்கிறேன். அவர்கள் கொடுத்த மோதிரங்களையும் அவரவர்களுக் கே திருப்பிக் கொடுத்தும் விடு கிறேன். ஆனால் நீ உன் முடிவைச் சட்டெனத் தெரிவி. உடனே திரு மணத்தை நடத்தி வைக்கிறேன்" என்றான்.

லதாங்கியும் "நான் அவர்





களைப் பார்த்துவிட்டு ஒருவரைத் தேர்ந்தெடுக்கிறேன். நீங்கள் அவர்களது சம்மதத்தையும் கேளுங்கள்.'' என்றாள். மன்னனும் அவர்களோடு பேசி அவர்கள் சம்மதமும் பெற்று அவர்களை அழைத்து வந்து லதாங்கிக்குக் காட்டினான். அவர்களும் லதாங்கியைப் பார்த்தார்கள்.

அப்போது லதாங்கி ''அப்பா! நீங்கள் அவர்களது மோதிரங்களை அவரவர்களுக்கு திருப்பிக் கொடுத்துவிட்டீர்கள். நான் பச்சைக் கல் மோதிரம் அணிந்திருக்கும் கேசவனை மணக்க விரும்புகிறேன்'' என்றாள்.

மன்னனும் ''உன் விருப்பப்படியே விவாகம் நடக்கும் ''எனக் கூறி உடனேயே திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யலானான். ஒரு நல்ல முகூர்த்தத்தில் கேசவனுக்கும் லதாங்கிக்கும் முறைப்படி விவாகம் நடைபெற்றது.

கேசவனை அந்நாட்டு மன்னனாக்கிப் பட்டாபிஷேகமும் லதாங்கியின் தந்தை நடத்தினான். கேசவனும் மாதவனைத் தன் மந்திரியாகவும் கோவிந்தனைத் தன் சேனாதிபதியாகவும் ஆக்கிக் கொண்டு நாட்டை நன்கு ஆண்டு வரலானான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! லதாங்கி மூவரில் ஏன் கேசவனைத் தன் கணவனாகத் தேர்ந்தெடுத்தாள்? அரசகுமாரர்களையெல்லாம் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிய லதாங்கி முடிவில் ஒரு சாதாரண ரஜபுத்திரனைத் தான் மணந்து கொண்டாள். அவனுக்கு மட்டும் நாடாளும் ஆசை இல்லை என்றதற்கு என்ன ஆதாரம்? மேலும் மூவரில் ஒருவரைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றால் செயலாக்கும் சக்தியைத் தரும் நீலக்கல் மோதிரம் அணிந்த கோவிந்தனைத் தேர்ந்தெடுத்திருக்கலாமே. அப்படிச் செய்யாமல் பச்சைக் கல் மோதிரம் அணிந்த கேசவனைத்தானே தேர்ந்தெடுத்தாள்? இது ஏன்? என் இந்த

சந்தேகங்களுக்குச் சரியான பதில்களைக் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''சாது அரிய சக்தி வாய்ந்த மோதிரங்களைக் கொடுத்ததும் மூவரும் முதலில் நினைத்தது மக்களின் நன்மையை நாடும் தம் மன்னனிடம் அவற்றைக் கொடுத்துவிட வேண்டும் என்பதுதான். இது அவர்களுக்குச் சுயநலம் இல்லை என்பதைத் தெளிவாக்குகிறது. பணத்தாசையோ நாடாளும் ஆசையோ இல்லை என்பதையும் தெரிவிக்கிறது. இதை லதாங்கி எளிதில் அறிந்துவிட்டாள். அடுத்து மூன்று மோதிரங்களுக்கும் தொடர்பு உள்ளது என்பது. ஒன்று யோசனை சொல்ல, மற்றது அதற்கு வழி காட்ட, மூன்றாவது அதனைச் செயல்படுத்தி அந்த யோசனையை ஆக்கபூர்வமாக்குகிறது. இவற்றில் அடிப்படையானது பச்சை மோதிரமே. அது யோசனை சொன்னாலே மற்ற இரண்டும் செயல்படும். பச்சை மோதிரமே இல்லாமல் மற்ற இரு மோதிரங்களில் எது இருந்தாலும் பயனில்லை. எனவே பச்சை மோதிரம் அணிந்த கேசவனை லதாங்கி தன் கணவனாகத் தேர்ந்தெடுத்தாள். இது முற்றிலும் சரியே. இதை நன்கு உணர்ந்த கேசவன் தன் யோசனைகளை நடைமுறையில் கொண்டு வர வழி சொல்ல மாதவனையும் அவற்றை செயலில் செய்து முடிக்கும் சக்தி பெற்ற கோவிந்தனையும் முறையே அமைச்சனாயும் சேனாதிபதியாகவும் நியமித்துக் கொண்டான். எனவே எல்லாம் சரியாகத்தான் நடந்திருக்கிறது'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே. அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# சொன்னபடி நடந்த விதம்!

திருப்பூர் சந்தைக்கு வெள்ளைய்யன் தன் நாயைக் கொண்டு சென்றான். அவன் உரக்க "இந்த நாய் நீங்கள் சொல்கிறபடியே நடக்கும். எந்தக் கடினமான வேலையையும் நீங்கள் சொன்ன உடன் செய்து முடிக்கும்" எனக் கூவினான். அதைக் கேட்டு அவன் முன் ஒரு சிறு கூட்டம் கூடியது.

கூட்டத்தில் நின்ற ஒருவன் "இவ்வளவு நல்ல நாயை நீ ஏன் விற்கிறாய்?" என்று கேட்டான்.

அதற்கு வெள்ளைய்யன் "நான் என்னவென்று சொல்வேன்? நேற்றிரவு என் வீட்டில் திருடர்கள் நுழைந்தார்கள். அப்போது இந்த நாய் அவர்கள் சொன்னபடி எல்லாம் கேட்டு நடந்தது. அவர்கள் இதனிடம் குரைக்காதே என்று கூறி என்னையும், என் மனைவியையும் கட்டிப் போட்டுவிட்டார்கள். இதற்கு இந்த நாய் அவர்கள் சொன்னபடி கயிறை எடுத்து வந்து கொடுத்தது. அவர்களுக்கு ஒவ்வோரு இடத்தையும் காட்ட எரியும் விளக்கைக் கவ்விக் கொண்டு சென்றது. இதனால் நான் எல்லாவற்றையும் இழந்து ஓட்டாண்டியாகிவிட்டேன்" என்று பற்களை நற நற வென்று கடித்தவாறே கோபத்தோடு கூறினான்.

அதுகேட்டு எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.



# அம்புலிமாமா அனுபந்தம்—62

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## ஆடும் கரடி

நம் நாட்டில் மலைகளிலும், பாறைகளிடையேயும் காடுகளிலும் வசிக்கும் கரடிகளின் மார்பில் 'V' வடிவக் கோடுகள் இருக்கும். இவ்வகைக் கரடிகளை எளிதில் பிடித்தும் பழக்கியும் ஆட்டங்களைக் கற்பிக்கிறார்கள். இவற்றைத் தெருக்களிலும் சர்க்கஸ்களிலும் பல வித்தைகளைச் செய்ய வைக்கிறார்கள். எரியும் வளையத்தில் குதித்து நுழைந்து போகும்படியும் அப்போது அதன் ஒரு ரோமம் கூடக் கருகாமல் இந்த வித்தையைச் செய்ய வைக்கிறார்கள்.




கரடி சாதாரணமாய் 250 செ. மீ. நீளம் இருக்கும். இது தன் இரு கால்களால் நிற்கும்போது 65லிருந்து 85 செ. மீ. உயரம் இருக்கும். இதன் கால்ச் சுவடுகள்கூட மனிதனின் கால் சுவடுகள் போலவே இருக்கும். கரடியின் மூக்கு வெண்மை கலந்த சாம்பல் நிறத்தில் இருக்கும். வெண்மையான நீண்ட நகங்களை இது கொண்டது.

பகலில் இது குகைகளிலும் பாறைகளுக்கு மத்தியில் படுத்துத் தூங்கும். தேனையும் கள்ளையும் இது விரும்பிப் பருகும். கள் குடித்த கரடியின் ஆட்டத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? வெகு வேடிக்கையாக இருக்கும்.

இதன் பார்வையும் கேட்கும் சக்தியும் சாதாரணமாக இருந்தாலும் மூக்கால் நுகரும் சக்தி சிறப்பானது. வெகு தூரத்தில் உள்ளதை வாசனை பிடித்தே கண்டுபிடித்துவிடும்.

இமய மலையிலுள்ள ஊதாக் கரடிகளும் கருப்பு கரடிகளும் சாதாரணக் கரடி போலவே உள்ளன.




# நந்தலால் போஸ்

தற்கால ஓவியர்களைப் பற்றி எண்ணுகையில் நந்தலால் போஸ் தீட்டிய ஓவியங்களே நமது நினைவிற்கு வரும். புதிய கற்பனைகளுடன் நல்லாசிரியராக இருந்து எண்ணிலடங்காத ஓவியர்களுக்கு ஊக்கமூட்டி உற்சாகமளித்து உருவாக்கிய பெருமை இவரைச் சாரும்.



சென்ற நூற்றாண்டில் பிறந்த இவர் பிரபல ஓவியரும் கல்கத்தாவில் ஓவியப் பள்ளியை நிறுவிப் பல ஓவியர்களை உருவாக்கிய அவனீந்திர நாதரின் பார்வையில் விழுந்தார். அவர் நந்தலால் போஸைத் தனக்கேற்ற சீடராகக் கருதி ஊக்கமளித்தார்.

ரவீந்திரநாத டாகூர் நிறுவிய சாந்திநிகேதனத்தில் நந்தலால் போஸ் 1914ல் சேர்ந்தார். அதன் பின் அப் பல் கலைக் கழகத்தின் ஓவியத் துறைப் பகுதியின் தலைமைப் பதவியை ஏற்று அக் கலாபவனின் முன்னேற்றத்திற்குத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

அவரது ஓவியங்களைப் பார்த்த மாணவர்களும், தற்

கால ஓவியர்களும் ஊக்கம் பெற்றார்கள். அவரது ஓவியங்கள் இந்தியப் பண்பாட்டில் புதிய முறையில் அமைந்தவை என்று விமரிசகர்களும், அபிமானிகளும் பாராட்டினார்கள். ஓவியர்கள் இயற்கையைப் புரிந்து கொண்டு பாரதப் பண்பாட்டை அறிந்து கொண்டு தமக்கென ஒரு பாணியை வகுத்துக் கொள்ள வேண்டும் என்று அவர் போதித்து வந்தார். அவரது ஓவியங்களில் இந்த மூன்று அம்சங்களையும் தெளிவாகக் காணலாம்.

பாரதப் பண்பாட்டைவிட்டு வழுவாமல், முறைப்படி ஓவியங்களை அழகுறத் தீட்டுவதில் நத்தலால் போஸ் கைதேர்ந்தவர். இதற்கு எடுத்துக்காட்டாக இவர் தீட்டிய அஜந்தா ஓவியங்கள் மிளிர்கின்றன.



நம் பண்பாடு வழுவாமல் தீட்டிய இயற்கைக் காட்சிகள் சம்பிரதாயச் சித்திரங்கள் போன்றவற்றை தன் கற்பனையைக் கொண்டு புதிய முறையில் ஓவியங்களைத் தீட்டிய இவர் இக் கலையைப் பணம் சம்பாதிக்கும் சாதனமாகக் கருதாமல் ஒரு யோக சாதனை செய்வது போலப் புனிதமானதாகக் கருதி வந்தார். அவர் ஓவியங்களைத் தீட்டுகையில் அதிலேயே லயித்து விடுவார்.

இவர் பல பரிசுகளையும் விருதுகளையும் பெற்றவர். ஆயினும் அவற்றால் தற்பெருமை அடையவில்லை. எளிய வாழ்வு வாழ்ந்து வாழ்நாள் முழுவதையும் ஓவியத் துறைக்காகவே இவர் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். இவ்வாறு தற்கால ஓவியர்கள் பலருக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்த நந்தலால் போஸ் 1966ல் அமரரானார்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. ஆங்கில மொழியில் முதன் முதலாகக் குழந்தைகளுக்காக எழுதப்பட்ட நாடகம் எது? எழுதியவர் யார்?
2. கர்நாடகத்தில் தயாராகும் எந்த உலோகப் பாத்திரங்கள் பெயர் பெற்றவை?
3. சர் ரோஜர் பெர்னாட் விளையாட்டின் எத்துறையில் புகழ் பெற்றார்?
4. சார்மினார் எங்கே உள்ளது?
5. ஒரு 'கொயருக்கு' எவ்வளவு காகித தாள்கள்? ஒரு ரீமிற்கு எவ்வளவு?
6. நாம் சுதந்திரம் பெறுமுன் நடந்த மூன்று வட்ட மேஜை மாநாடுகளில் கலந்து கொண்ட இரு இந்தியத் தலைவர்கள் யார்?
7. கண்ணிற்குத் தெரியாத சிறு கிருமிகளால் நோய் பரவுகிறது என்று யார் கண்டுபிடித்தார்?
8. நம் நாட்டிலிருந்து முதலில் செலுத்திய விண்வெளிக் கோள் எது?
9. நம் பணக் கணக்கு வருடம் ஏப்ரல் 1ல் ஆரம்பம். இங்கிலாந்தில் இப்படிப்பட்ட வருடம் எப்போது ஆரம்பம்?
10. தொலைக் காட்சியில் 'மால்குடி டேஸ்' என்ற தொடரின் ஆசிரியர் யார்? இதன் மூலப் பெயர் என்ன?
11. 'கிவி' பறவைகள் எந்நாட்டில் உள்ளன?
12. 'மயிலாசனம்' எந்த அரசருக்காகத் தயாரிக்கப்பட்டது?
13. நான்குவித சுதந்திரங்கள் என்ன?
14. கி.பி. 1885ல் பம்பாயில் நடந்த முதலாவது இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக்குத் தலைமை தாங்கியவர் யார்?

## விடைகள்

1. பீட்டிர்பான் (1904) சர் ஜேம்ஸ் மேரி
2. பீடாரில் தயாராகும் பித்தளைப் பாத்திரங்கள்.
3. 1954 மே 6ல் முதன் முதலில் ஒரு மைல் தூரத்தை நான்கு நிமிடங்களில் ஓடியவர்
4. ஹைதராபாத்
5. 24 தாள்கள், ஒரு கொயர், 500 தாள்கள் ஒரு 'ரீம்'
6. தேஜ் பகதூர் சப்ரூ, எம். ஆர். ஜெயகர்.
7. லூயி பாஸ்டர்
8. பிருத்வி
9. ஏப்ரல் 6
10. சுவாமி அண்ட்ஹிஸ் பிரண்ட் ஆர். கே. நாராயணன்
11. நியூஜிலாந்து
12. முகலாய சக்கரவர்த்தி ஷாஜஹானுக்காக
13. பேச்சு, மதம், பொருளாதாரம், பயத்திலிருந்து விடுதலை இவற்றில் சுதந்திரம்
14. டபிள்யு. சி. பானர்ஜி



# வாழத் தெரிந்த எதிரிகள்

கொடியூரில் இருபணக்காரரர் கள் இருந்தனர். ஒருவர் வியா பாரி வையாபுரி. மற்றவர் விவ சாயம் செய்யும் வைத்தியலிங்கம். வைத்தியலிங்கம் உடல் உழைப்பை நம்புவர் என்றால் வையாபுரி பணபலத்தை நம்புவர். இருவரும் அறிவில் ஒருவருக்கு மற்றவர் சளைத்தவர் அல்ல. ஆனால் ஒரு வருக்கு மற்றவரைப் பிடிக்காது.

அக்கிராம வாசிகள் இருவரும் சக்தி வாய்ந்தவர்கள் என்று அவர்களிடம் பயப்பட்டு வந்தார் கள். ஆனால் பணக்காரரர்கள் இரு வரும் நாம் சொல்வதற்கே ஊரார் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்று தனித்தனியே எண்ணி னார்கள்.

அந்த கிராமத்து அதிகாரி மயில்சாமி பெயரளவில் தான் கிராம அதிகாரி., எந்த முடிவை யும் அவர் வையாபுரியையும் வைத்தியலிங்கத்தையும் கலந்து விட்டுத் தான் எடுப்பார். இருவர் அபிப்பிராயமும் ஒன்றாக இரா விட்டால் அந்த வேலையைச் செய்யவேமாட்டார்.

விவசாயத்தில் புதுமுறைகள் புகுத்தப்பட்டு விவசாயிகளுக்கு அரசாங்கம் உரத்தை விலைக்குக் கொடுக்க வேண்டும் என்று அந் நாட்டு மன்னர் முடிவு செய்தார். இந்த எருவிற்பனைக்கு கிராமங் களில் வியாபாரிகள் நியமிப்பது பற்றி முடிவு செய்ய மன்னர் கிராம அதிகாரின் கூட்டம் ஒன்றை தலைநகரில் கூட்டினார்.

அதில் கலந்து கொண்டவர் கள் எல்லாரும் தம் ஊரில் வியா பாரிகளை நியமிக்கலாம் என் றார்கள். ஆனால் மயில்சாமி மட் டும் அதுபற்றி தன் கிராமத்து

—பாபநாசம் சாமா—



மக்களைக் கலந்துவிட்டு முடிவு சொல்வதாகக் கூறினான். அது கேட்டு மன்னர் ஆச்சரியப்பட்டு "இது நல்ல திட்டம்தானே.இதற்கு ஏன் கிராமத்தவரைக் கலந்து ஆலோசிக்க வேண்டும்?" என்று கேட்டார்.

மயில்சாமியும் "அரசே! எங்கள் ஊரில் வையாபுரி, வைத்தியலிங்கம் என்று இரு பிரமுகர்கள் இருக்கிறார்கள். இந்த இரு பிரமுகர்களும் ஒருவர் செய்வதை மற்றவர் எதிர்ப்பவர்கள். எனவே இருவரும் ஒத்துப் போகும்படி செய்தாலே என் ஊரில் உர விற்பனை செய்ய முடியும். அவர்கள் மகா புத்தலிசாலிகள், சட்டத்திற்குப் புறம்பாக எதையும் செய்யமாட்டார்கள்" என்றார்.

மன்னர் எல்லா கிராம அதிகாரிகளையும் அனுப்பிவிட்டு மயில்சாமியை மட்டும் இருக்கச் சொன்னார். அப்போது அமைச்சர் அங்கு வந்து மன்னரிடம் "அரசே! நம் அண்டை நாட்டு மன்னன் மாதவசேனன் மக்களைத் துன்புறுத்துகிறான். மக்கள் அவனை வெறுக்கிறார்கள் என நம் ஒற் றர்கள் கூறுகிறார்கள். அந் நாட்டை நாம் கைப்பற்ற இதுவே தக்க சமயம்" என்றார்.

மன்னரும் "சரி. நமது கீழண்டை மன்னன் சந்திரசேனன் பலமிக்கவனாயிற்றே. நாம் மாதவசேனன் மீது படை எடுத்துப்போன சமயத்தில் அவன் படை எடுத்து வந்து நம் நாட்டைக் கைப்பற்றிவிடுவானே" என்றார்.

அதற்கு அமைச்சர் "அரசே! இதற்கும் ஒரு வழி செய்திருக்கிறேன். நம் விதூஷகன் இருவருக்குப் பயிற்சி அளித்து ஒருவனை மாதவசேனனிடமும் மற்றவனை சந்திரசேனனிடமும் அனுப்பி இருக்கிறேன். அவர்கள் சமயம் பார்த்து கோள் மூட்டி அந்த இரு மன்னர்களிடையேயும் பகைமை வளரும்படிச் செய்வார்கள். நீங்கள் மாதவ சேனனைத் தோற்கடித்தால் சந்திரசேனன் மகிழ்ச்சியே அடைவான்" என்றார்.

மன்னர் அதுகேட்டு அமைச்சரைப் பாராட்டினார். அப்போது மயில்சாமி குறுக்கிட்டு "அரசே! தங்கள் விதூஷகர் மேதாவி போலத் தென்படுகிறார். அவரால் எங்கள் ஊர் பிரச்னைக்குத் தீர்வு காண முடியும் என நினைக்கிறேன்" என்றார். மன்னரும் உடனே விதூஷகனை வரவழைத்தார். விதூஷகனும் மயில்சாமியின் பிரச்னையை விசாரித்து அறிந்து கொண்டு "அது சரி. "வியாபாரியும் விவசாயியும் ஒருவரை மற்றவர் நம்பித்தானே இருக்க வேண்டும்? உங்கள் ஊரில் அவர்கள் எப்படி பகைமை கொண்டு இருக்க முடிகிறது?" என்று கேட்டான்.

அதற்கு மயில்சாமி "வைத்தியலிங்கம் தனக்கு வேண்டிய பொருள்களை மற்றவர்களை விட்டு வையாபுரியிடமிருந்து வாங்கி வரச் சொல்கிறார். வையாபுரியும் அதுபோல வைத்தியலிங்கத்திடமிருந்து விளை பொருள்களை வாங்கிக் கொள்கிறார். இப்படி அவர்கள் ஒருவரை ஒருவர் மறைமுகமாக அனுசரித்துக் கொண்டு போகிறார்கள். ஆனால் அவர்களிடையே பேச்சு வார்த்தை மட்டும் கிடையாது" என்றார்.

விதூஷகனும் "ஒஹோ! இவர்கள் மகாபுத்திசாலிகள் போல் தெரிகிறது. இவர்களிடம் கோள் மூட்டுபவர்களை அனுப்பினால் சரியாகும்" என்றான். அப்போது மயில்சாமி மன்னரிடம் "அரசே!





வர்கள்.

அந்த இருவரும் இல்லாததை யும் பொல்லாததையும் வையா புரியிடம் வைத்தியலிங்கத்திடம் கோள் சொல்லிக் கொண்டே இருந்தார்கள். அதை எல்லாம் கேட்டு அந்த இரு பிரமுகர்களும் ஆத்திரப்பட்டவர்கள் போலத் தென்பட்டாலும் அவர்களிடையே எவ்வித சண்டையோ சச்சரவோ ஏற்படவில்லை.

சங்கரன் வையாபுரியின் வீட் டில் திருடத் தன் கையாளை அனுப்பி அவன் திருடும்போது பிடிபடும்படிச் செய்தான். அவன் வையாபுரியிடம் தன்னை அனுப்பி யது வைத்தியலிங்கம்தான் என்று வையாபுரியிடம் கூறினான்.

இதுபோல கோபாலனின் ஆள் வைத்தியலிங்கத்தின் மாடு களின் தீவனத்தில் விஷம் கலந்த போது பிடிபட்டான். அவனோ தன்னை அவ்வாறு செய்யச் சொன் னது வையாபுரிதான் என்று வைத்தியலிங்கத்திடம் கூறினான்.

வையாபுரியும் வைத்தியலிங் கமும் குற்றவாளிகளை கிராம அதிகாரியிடம் ஒப்படைத்தார் களேயொழிய ஒருவர் மீது மற்ற வர் புகார் தொடுக்கவில்லை. பிடிபட்ட இருவரும் தம் செயலை மறைக்க ஏதோ உளறுகிறார்கள் என்று கூறி அவர்கள் பேசாமல் இருந்துவிட்டார்கள்.

விதூஷகரின் ஆட்கள் என் ஊருக்கு . வந்து வெற்றிகரமாக விஷயத்தை முடிக்கும்வரை தாங் கள் மாதவ சேனனின் நாட்டின் மீது படை எடுத்துப் போக வேண் டாம் என்று வேண்டிக் கொள் கிறேன்'' என்றார்.

அதுகேட்டு மன்னர் ஆச்சரியப் பட்டார். ஆனால் அது ஏன் என்று மட்டும். அவரிடம் கேட்க வில்லை. விதூஷகனும் இருவரை கொடியூருக்கு அனுப்பினான். வையாபுரியின் வீட்டிற்கு சங்க ரன் என்பவனும் வைத்தியலிங்கத் தின் வீட்டிற்கு கோபாலன் என் பவனும் சென்றனர். இருவரும் கோள் மூட்டுவதில் கை தேர்ந்த

ஒருநாள் வைத்தியலிங்கம் கோபாலனை அழைத்து "நீ வையாபுரியைப் பற்றி இதுவரை சொன்னதெல்லாம் பொய் என்றே நான் நினைக்கிறேன். நீ இன்னமும் ஒரு வாரத்திற்குள் வையாபுரியைப் பற்றி ஒரு உண்மையான தகவல் கொடுக்காவிட்டால் நீதான் உன் ஆளை அனுப்பி அவர் வீட்டில் திருடச் சொன்னாய் என்று கிராம அதிகாரியிடம் புகார் செய்வேன்" என்றார். இதுபோல வையாபுரியும் சங்கரனிடம் கூறினார்.

இதற்குப் பின் சங்கரனும் கோபாலனும் இரகசியமாகச் சந்தித்து "இவர்கள் எதற்கும் மசிய மாட்டார்கள். நாம்தான் அகப்பட்டுக் கொள்வோம் போலிருக்கிறதே. நம்மைப் பற்றி அரசர் என்ன நினைப்பார்? எனவே ஒரு வாரத்திற்குள் ஏதாவது கண்டுபிடித்தாக வேண்டும்" எனத் தீர்மானித்துக் கொண்டார்கள்.

இதற்குள் உர விற்பனை பற்றி வையாபுரிக்கும் வைத்தியலிங்கத்திற்கும் தனி தனியாக அறிவிக்கப்பட்டது. உரத்தை நேரடியாக விவசாயிகளுக்கே கொடுக்க வேண்டும் என்றும் வையாபுரி வாயிலாக விற்கக் கூடாதென்றும் வைத்தியலிங்கம் கண்டிப்பாகக் கூறினார். வையாபுரியோ விவசாயிகளுக்குத் தானே உரத்தை விற்க வேண்டும் என்று வலியுறுத்தினார்.

இதற்குள் பிரமுகர்கள் இருவ





ரும் தம் அபிப்பிராயங்களை உடனேயே தெரிவிக்க வேண்டு மெனப் போட்டி போட்டுக் கொண்டு தம் ஆட்களை அனுப்ப தீர்மானித்தார்கள். வையாபுரி யின் ஆள் மன்னனைக் கண்டு "உரத்தை வியாபாரி வாயிலாக விற்காமல் அரசாங்கமே நேரடி யாக விவசாயிகளுக்குக் கொடுக் கலாம்" என்று சொல்வானாம்.

இந்தக் தகவலை கோபாலன் வைத்தியலிங்கத்திடம் தெரிவிக் கவே அவரும் "பேஷ். சரியான தகவல் கொண்டு வந்தாய். விவ சாயிகள் எல்லாம் உரத்தை என் னிடம் கொடுத்துவிட்டுத் தானே வாங்கிக் கொள்வார்கள். இது வியாபாரம் செய்யும் முதல் அனு பவமாக எனக்கு இருக்கும். அத னால் நான் மன்னரிடம் யாரை யும் அனுப்பப் போவதில்லை" என்றார்.

சங்கரன் வையாபுரியிடம் வைத் தியலிங்கம் ஆள் அனுப்ப நினைத் திருப்பதைக் கூறவே" என் ஆளை மன்னரிடம் அனுப்பவில்லை" என்றார்.

இதற்குப் பின் கிராம அதிகாரி யும் சங்கரனும் கோபாலனும் தலைநகருக்குச் சென்றனர். அங்கு அவர்கள் மன்னரிடமும் விதூஷ கரிடமும் நடந்ததை எல்லாம் கூறினார்கள். அப்போது மன்னர் "இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

அப்போது கிராம அதிகாரி மயில்சாமி "அரசே! உரத்தை வையா புரிதான் விற்க வேண்டும் என்று தங்கள் கட்டளையை அனுப்புங் கள். வைத்தியலிங்கம் தனக்குத் தேவைப்படும் உரத்தை யாரைக் கொண்டாவது வையாபுரியிட மிருந்து வாங்கிக் கொள்வார். இந்த கட்டளையை நீங்கள் பிறப் பித்தால்தான் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். அவர்கள் தாமாக எந்த ஏற்பாட்டையும் செய்து கொள்ள மாட்டார்கள்" என்றார்.

சங்கரனும் கோபாலனும் விதூ ஷகனிடம் "நாங்கள் என்ன சொல்லியும் அந்த இரு பிரமுகர்

களும் எங்களை நம்பாததுதான் ஆச்சரியமாக இருக்கிறது. நாங்கள் செய்வதெல்லாம் முன் கூட்டியே அவர்களுக்குத் தெரிந்து விடுகிறது. இது என்ன மாயம்!'' என்றனர்.

விதூஷகனும் சிரித்தவாறே ''இருவரும் சிறந்த அறிவாளிகள். என்ன நடக்கும் என்பதை முன் கூட்டியே யோசிப்பவர்கள். இருவரும் ஒருவர் அறிவை மற்றவர் பாராட்டுபவர்கள். அதனால் யார் என்ன சொன்னாலும் கேட்காமல் தாமே யோசித்துப் புரிந்து கொள்வார்கள். அவர்கள் வாழத் தெரிந்த எதிரிகள். இநத அறிவாளிகளின் செயல்களால் ஊராருக்கு நன்மையே ஏற்படும் என்றான்.

அப்போது மன்னர் ''ஓ! இதிலிருந்து ஒற்றர்கள் சொல்வதை நம்பாமல் நாமே நேரில் கண்டும் யோசித்தும் செயல்பட வேண்டும். இதைச் சொல்லத்தான் கிராம அதிகாரி நான் படை எடுத்துப் போவதைத் தள்ளிப் போடச் சொன்னரா? சண்டை சச்சரவு இல்லாமல் வாழ வேண்டும் என்ற படிப்பினை எனக்கும் கிடைத்தது. எதிரிக்கும் நம்போல சாமர்த்தியம் உண்டு என்பதை நாமும் உணர வேண்டும் இதை எனக்கு உணர்த்திய உங்களுக்கு நன்றி'' என்று மயில்சாமியிடம் கூறினார்.

மயில்சாமியும் சிரித்துக் கொண்டே ''நான் இரு எதிரிகளுக்கு மத்தியில் கிராம அதிகாரியாக இருந்து அனுபவப் பட்டவன். அதனால்தான் நீங்கள் படை எடுப்பதைத் தள்ளி வைக்கச் சொல்லி யோசிக்க வைத்தேன்'' என்றார்.

மன்னரும் ''இனி போரில்லாமல் அமைதியாக ஆளக் கற்றேன்'' என்றார் சிரித்துக் கொண்டே.



# நீந்தத் தெரியாத தவளைகள்!

செங்கோடன் தன் வயலின்மீது ஒரு வட்டி வியாபாரியிடம் கடன் வாங்கினான். ஐந்து வருடங்களாகியும் அவன் கடனைத் தீர்க்காததால் வட்டி வியாபாரி அவனது நிலத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டு விட்டான். செங்கோடன் அது அநியாயம் என்று கூறி கிராம அதிகாரியிடம் முறையிட்டும் பயனில்லாது போகவே மன்னனிடம் போய் முறையிட்டான்.

மன்னனும் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு "நீ ஏன் ஐந்து வருடங்களாகக் கடனை அடைக்கவில்லை?" என்று கேட்கவே அவனும் "என்ன செய்வேன்? எங்கள் ஊரில் ஐந்து வருடங்களாகத் தவளைகள் நீந்தவில்லை. அவற்றிற்கு நீந்தத் தெரியுமோ அல்லது தெரியாதோ என்பது கூட என்னால் அறிய முடியவில்லை" என்றான்.

"இது என்ன உளறல்?" என்று அமைச்சர் கேட்கவே மன்னனோ "இவனுக்கு இவன் வட்டி வியாபாரிக்குச் செலுத்த வேண்டிய பணத்தை கொடுத்து அனுப்புங்கள்" என்றான்.

மந்திரி விழிக்கவே மன்னனும் "இவன் சொன்னதன் பொருள் இவனது ஊரில் ஐந்து வருடங்களாகத் தொடர்ந்து மழை பெய்யவில்லை என்பதே. அதனால்தான் கடனை அடைக்க முடியவில்லை என்று சொல்லாமல் சொன்னான். அதற்காகத் தான் கடன் நிவாரணமாகப் பணம் கொடுக்கச் சொன்னேன்" என்றான்.






அயோத்திக்குப் போகும் வழியிலுள்ள வால்மீகி முனிவரின் ஆசிரமத்திற்கு அனுமார் போய் அம்முனிவரை வணங்கினார். அவர் வால்மீகி முனிவரிடம் "முனி சிரேஷ்டரே! இராமருக்கு இப்படி ஒரு நிலை ஏன் ஏற்பட்டது?" என்று கேட்டார்.

வால்மீகி முனிவரும் "நாட்டை ஆளுவது என்பது எவ்வளவு சிரமமான வேலை! பலவாறான ஏசல்களுக்கும் தூற்றல்களுக்கும் மன்னன் ஆளாக வேண்டிவரும். ஆட்சியில் குற்றமற்றவர்களை அதிகாரிகள் குற்றவாளிகள் என்று கூட நிரூபித்துவிடுகிறார்கள். வீண் வதந்திகளைப் பரப்புபவர்களைப் பற்றி சொல்லவே வேண்டாம். என்ன சொல்கிறோம் என்று முன் பின் யோசியாமல் எதையாவது சொல்லிக் கொண்டே திரிவார்கள். இதனால் சில சமயங்கள் மன்னன் தியாகம் செய்ய வேண்டி வரும். இதெல்லாம் உனக்குத் தெரியாதா? இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டிருக்கிறது என்று நான் கூறவும் வேண்டுமோ?" என்றார்.

அனுமார் அந்த ஆசிரமத்தில் சீதை இருந்த இடத்தையும் அவனும் குகனும் அம்புகளை எய்த இடங்களையும் பார்த்தார். சீதை இருந்த இடத்தை பக்தி சிரத்தையுடன் கைகளை வைத்து எடுத்துத் தம் கண்களில் ஒற்றிக் கொண்

—எதிரிகள் அடியோடு ஒழிந்தனர்—



டார். பின்னர் அவர் வால்மீகி முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டு ஆகாய வழியாக அயோத்திக்குச் சென்றார்.

அங்கு அரண்மனைப் பூங்காவில் அவர் லவனையும் குசனையும் கண்டார். அவர்கள் தம் அம்புகளால் உயரமான தூண் ஒன்றை அமைத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அனுமாரைக் கண்டதும் அவரைச் சுற்றி அம்புகளை எய்து அவரை இப்படியும் அப்படியும் நகரவிடாமல் நிறுத்தி விட்டார்கள்.

லவன் அவரைப் பார்த்து "யார் நீ? உன்னைப் பார்த்தால் யாரோ ஒரு மாயக்காரன் போலத் தெரிகிறதே" என்றான். லவன் சீதை போலத் தோற்றமும் குசன் இராமர் போன்ற தோற்றமும் கொண்டிருப்பதைக் கண்ட அனுமார் அவர்களைப் பார்த்து "நான் தான் அனுமான். நான் இராமரைப் பார்க்க வேண்டும்" என்றார்.

லவனோ "இல்லை. உன்னை நம்ப முடியாது. நீ யாரோ மாயாவி. அனுமாரின் வேஷத்தில் வந்திருக்கிறாய்" என்றான். குசன் லவனை அமைதியாக இருக்கும்படிச் சொல்லி அனுமாரைப் பார்த்து "நீதான் அனுமார் என்பதை நிரூபித்தாலே உன்னை விடுதலை செய்வோம்" என்றான்.

அனுமாரும் தனது உடலை மிகப் பெரிதாக்கிக் காட்டினார். அவர்கள் இருவரையும் தம் முதுகின்மீது ஏற்றிக் கொண்டு ஆகாயத்தில் உயரப்போய் அயோத்தி நகரைச் சுற்றி வந்து அவர்களைப் பார்க்கச் செய்தார். பிறகு அவர் தன் வாலை நீளமாக்கிக் கொண்டு அதை கிர்கிர் என்று சுற்றி கீழே வைத்து சுருளாகச்சுருட்டி உயரமான கோட்டை போலக் கட்டிக் காண்பித்தார்.

அப்போது அவர்கள் இருவரும் தாம் காண்பது உண்மையான அனுமாரைத்தான் என்று நம்பினார்கள். அவர்களும் "அனுமாரே! உங்களது சக்தி சாமர்த்தியங்

களை நேரில் காணும் பாக்கியம் பெற்றோம்'' என்று கூறினார்கள்.

லவனும் குசனும் அவரது இரு கைகளையும் பிடித்து அழைத்துக் கொண்டு இராமரைக் காணச் சென்றார்கள்.

இராமர் அனுமாரைக் கண்டதும் துக்க மேலீட்டால் எதுவும் பேசாமல் கண்ணீர் வடிக்கலானார். அனுமார் இராமர் முன் மண்டியிட்டு வணங்கி "நீங்களும் சாதாரண மனிதன்போல வருத்தப் படுவது சரியா? இப்போது இவ்வாறெல்லாம் நடந்திருப்பது எதற்காக? ஆட்சி புரிவது பஞ்சணையில் படுத்துத் துயில்வதுபோல அல்ல என்றும் எந்த வேலையையும் எந்த நேரத்திலும் செய்ய வேண்டிவரும் என்பதையும், எவ்விதத் தியாகமும் செய்ய வேண்டும் என்பதையும் வருங்காலத்தவர்க்கு உணர்த்தி இராம ராஜ்யம் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சொல்வதற்குத்தான். இதைப் புரிந்து கொண்டவர்கள் குறைகூற மாட்டார்கள்'' என்றார்.

இராமரும் பெருமூச்சு விட்டவாறே "அனுமாரே! உங்களைக் கண்டதாலும் உங்கள் பேச்சைக் கேட்டதாலும் என் மனம் சற்று ஆறுதல் அடைந்துள்ளது. சீதை இல்லாதது ஒருபுறம் இருக்க இந்த அசுவமேதயாகமும் முழுமை அடை



யாமல் போய்விட்டால் நானும் இல்லாமல்தான் போய்விடுவேன். அசுவமேதயாகக் குதிரை இப்போது மணிப்புரத்தின் பக்கம் போயிருக்கிறதாம். அந்தக் குதிரைக் காவலாக நீங்களும் அங்கு போக வேண்டும். இதற்காகத்தான் உங்களை வரும்படிச் சொல்லி அனுப்பினேன். இப்போது அக் குதிரையைக் காக்க இலட்சுமணனும் பரதனும் சத்துருக்கனனும் சென்றிருக்கிறார்கள்'' என்றார்.

இராமரின் கட்டளையை ஏற்றுக்கொண்டு தம் கதையைத் தோளில் மீது வைத்தவாறே உயரக் கிளம்பி மணிப்புரத்திற்குச் சென்றார். போகும் வழியில் அவர் ஒரு ராட்



சஸியும் ஒரு ராட்சஸனும் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருப்பதை அவர் கண்டார். அவருக்கு சந்தேகம் ஏற்படவே மிகச் சிறிய உருவை எடுத்துக் கொண்டு அவர்களருகே போனார். அங்கு ஒரு மரத்தின்மீது அவர் அமர்ந்து அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று கேட்கலானார்.

அவர்கள் இருவரும் ஆடுவதை நிறுத்தி அனுமார் உட்கார்ந்திருந்த மரத்தின் கீழ் வந்தார்கள். அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை மரத்தின் மீதிருந்த அனுமார் கவனமாகக் கேட்கலானார்.

"எதிரிகளின் ஒருவன் தப்பி விட்டாலும் அவனால் நாசம் ஏற்படுத்த முடியும் அல்லவா? ராட்சஸர்களில் தப்பியது நாம் இருவர் மட்டுமே. கராள கண்டா! அன்று நாம் பழிக்குப்பழி வாங்கி விட்டோம். அன்றிரவு நாம் சலவைத் தொழிலாளிகள்போல நடித்து உரத்த குரலில் கத்தி, சண்டை போட்டது எவ்வளவு பயனைத் தந்தது பார்த்தாயா?" என்று ராட்சஸி கூறினாள்

கராளகண்டனும் "சுர்ப்பணகையே! நீயும்தான் எதிர்க் கூச்சல் போட்டாய் அதுகூட நன்றாகத் தான் இருந்தது. "என்றான். கராள கண்டன் சத கண்ட இராவணனின் தம்பி. போரில் உயிர் தப்பி தன் அண்ணன் சதகண்ட இராவணனைக் கொன்ற இராமரையும் சீதையையும் பழி வாங்க சலவைத் தொழிலாளி வேடத்தில் அயோத்தியை அடைந்தான்.

இராவணனின் தங்கை சூர்ப்பணகையும் இறக்கவில்லை. அவளும் இராமரையும் சீதையையும் பழி வாங்க அயோத்திக்கு வந்தாள். அவளும் சலவை செய்யும் பெண்ணாக மாறி கராள கண்டனைச் சந்தித்தாள். இருவரும் பசி தாங்க முடியாமல் சாப்பிட யாராவது மனிதன் கிடைப்பானா என்று திரிந்தவாறே அயோத்தி நகரின் எல்லையில் திரிந்து கொண்டிருந்தார்கள். அவர்கள்



மனித உருவில் இருந்ததால் ஒரு வரை மற்றவர் கொன்று தின்ன நினைத்தார்கள்.

சுர்ப்பணகை தன் சுய உரு வம் எடுத்து மனித உருவில் இருந்த கராள கண்டனைப் பிடிக் கப் போனாள். கராள கண்டனும் தன் உருவை எடுத்து "நீ ராட் சஸியா?" என்று ஆச்சரியத் தோடு கேட்டான். அதன் பிறகு அவர்கள் மீண்டும் உருமாறி சல வைக்காரர்கள் போல நடித்து இராமரை இகழ்ந்து பேசிச் சண்டை போட்டுவிட்டு அயோத் தியை விட்டே வெளியேறினார் கள்.

அப்போது கராள கண்டன் "நல்ல வேளை! அனுமார் அப் போது அயோத்தியில் இல்லை. அவர் மட்டும் இருந்திருந்தால் நம்மை அவர் தம் வாலால் கட்டி இழுத்துக் கொன்றிருப்பார். நாம் தப்பி இந்தக் காட்டிற்கு வந்து விட்டோம்" என்றான். சுர்ப்பண கையும் "அந்த அனுமாரைப் பற்றிப் பேசாதே. அவர் பெய ரைக் கேட்டாலே பயமாக இருக் கிறது" எனவே கராள கண்டனும் "ஆமாம். உன் அண்ணன் இலங் கையில் உனக்குக் கட்டிக் கொடுத்த மாளிகையை எரித்தவன் அல் லவா அவன். தன் வாலை ஆட் டியே அதிலிருந்த நெருப்பால் இலங்கை முழுவதையும் எரித்து விட்டவனல்லவா அவன்" என்று கூறினாள்.

சூர்ப்பணகையின் முதுகில் தீப்பட்டு ஏற்பட்ட வடு இருந்தது. அது இலங்கை எரிந்தபோது ஏற்பட்ட காயத்தால் உண்டானது கராளன் அதைப் பார்த்து கேலி யாக "ஓ! இது அதன் நினைவுச் சின்னமா?" என்று கேட்டான்.

சூர்ப்பணகையோ சற்று கோபத் தோடு "போதும் நிறுத்து" எனக் கூறினாள். அப்போது கராள கண்டன் "எனக்கும் அந்த அனு மாரைக் கண்டாலே பிடிக்காது தான். அவன் வாலை ஆட்டிக் கொண்டே இந்த மாதிரி வேலை களைச் செய்கிறான். அதை ஒட்ட



நறுக்க வேண்டும்'' என்றான்.

சூர்ப்பணகையும் ''சபாஷ்! அப்படிச் சொல். ஆனால் நீயும் போர்க்களத்திலிருந்து பயந்து ஓடி வந்தவன்தானே'' என்று கேலி செய்தாள். அவனோ ''நான் ஓடி வந்தது பயத்தால் அல்ல, பழிக்குப் பழி வாங்கத்தான். என் அதிர்ஷ்டம். உன்னை நான் சந்தித்தேன். இருவர் நோக்கமும் ஒன்றுதான். இனி நாம் சேர்ந்தே இயங்குவோம்'' என்றான்.

சூர்ப்பணகையும் சரி எனவே கராளகண்டன்'' இனி அடுத்தாற் போல நாம் செய்ய வேண்டியது. அந்த இராமனின் அசுவமேத யாகக் குதிரையை ஒழிப்பது தான். அப்படிச் செய்தாலே இராமன் செய்யும் அசுவமேத யாகம் பாதியில் நின்றுவிடும். சீதை இல்லாத நடைபிணமாக உள்ள அந்த இராமன் தன் யாகம் முடிவடையாதது கண்டு உண்மையிலே பிணமாகி விழுவான்'' என்றான்.

சூர்ப்பணகையும் ''சரி, கிளம்பு அந்தக் குதிரையைக் கொன்று அதன் மாமிசத்தையும் உண்போம்'' என்றாள். கராள கண்டனும் எழுந்து போகத் தயாரானான். அப்போது அனுமார் மரக் கிளையைப் பிடித்து ஆட்டவே இலைகள் சூர்ப்பணகை மீதும் கராள கண்டன் மீதும் விழுந்தன.

அது கண்டு சூர்ப்பணகை ''ஓ! மலர்மாரி பொழிகிறதே'' எனவே கதாளகண்டனும்'' அட பாவமே! மலருக்கும் இலைக்கும் உனக்கு வித்தியாசம் தெரியவில்லையா! விழுந்தது மரத்தின் இலைகளே! நன்றாகப் பார்!'' என்றான்.

சூர்ப்பணகையும் ''சரி சரி. ஏதோ ஒன்று விழுந்தது. அதைப் பற்றி இப்போது வீணாக விவாதம் நடத்த வேண்டாம். நம் வேலையைக் கவனிக்கலாம். கிளம்பு'' என்றாள். இருவரும் கிளம்பும் போது தம்முன் ஒரு பெரிய கயறு தானாகவே வருவதைக் கண்டு திகைத்து நின்றனர். ஆமாம். அது அனுமாரின் வால்தான். கயறு

அல்ல.

கராளகண்டன் அதை ஒரு பாம்பு என நினைத்து அலறினான். சூர்ப்பணகையோ அதைக் கூர்ந்து பார்த்துவிட்டு "இது பாம்பு அல்ல. ஒரு குரங்கின் வால். அனுமானின் வால் போலிருக்கிறது" என்றாள்.

அது கேட்டுக் கராள கண்டன் "அனுமானின் வாலா! இருக்காது. அவன் இங்கே எங்கே வந்தான்? எங்கேயோ ஒரு மலையில் இருக்கிறான். நீ ஏதோ ஒரு வாலைப் பார்த்துவிட்டு அனுமானின் வால் என்று பயந்துவிடுகிறாய்" என்று கூறினான்.

சூர்ப்பணகையோ "எனக்கு நன்றாகத் தெரியும் இது அனுமானின் வால்தான்" என்றாள். அது கேட்டுக் கராளகண்டன் "ஐயோ! அனுமான் இங்கே வந்துவிட்டானா! நான் போகிறேன்" என்று ஓடத் தொடங்கினான். சூர்ப்பணகை அவனைப் பிடித்து நிறுத்தி "எங்கே ஓடுகிறாய்? என்னைத் தனியாகவா விடப் போகிறாய்?" என்று கேட்டாள்.

அனுமார் மரத்திலிருந்து பயங்கரமாக உறுமிக் கொண்டே கீழே குதித்தார். அந்த ராட்சஸர்கள் அவரைக் கண்டதும் பயந்து ஓடவே அவர் ஒரு பாறையைப் பெயர்த்து எடுத்து அவர்கள் மீது விட்டெறியவே. அவர்கள் இருவரும் அதனடியில் சிக்கி நசுங்கி இறந்து போனார்கள்.

இவ்வாறு தப்பிய இரு ராட்சஸப் பிறவிகளையும் அனுமார் ஒழித்தார். அதன் பின் அவர் உயரக் கிளம்பி ஆகாய வழியாய் மணிப்புரம் நோக்கிச் சென்றார். அவர் பல மலைகளையும் காடுகளையும் ஆறுகளையும் கடந்து மணிபுரத்தை அடைந்தார்.

அப்போது மணிப்புரத்துள் மின்னல் வேகமாகப் போவதைக் கண்டு அனுமாரும் அதைவிட வேகமாக அந்நகருக்குள் சென்றார்.





வணங்கவே அவளும் "அண்ணா மலை! இதென்ன அறியாமை? பச்சை மரத்தை வெட்ட எப்படி உன் மனம் ஒப்பியது?" என்று கேட்டாள். அண்ணாமலையும் "அம்மா தாயே! என் பெயரையே அறிந்த நீ என் நிலைமையை அறியாமலா இருப்பாய்? என் மனைவி மக்களைக் காப்பாற்ற நான் ஏதாவது சம்பாதித்துத் தானே ஆகவேண்டும்? அதனால் விறகு வெட்டி பிழைக்கலாம் என்று நினைத்தேன்" என்றான்.

அப்போது அந்தப் பெண் அண்ணாமலையிடம் இரக்கம் காட்டி "நான் வனதேவதை,உனக்கு நல்லது செய்ய விரும்பிகிறேன்." என்று கூறிக் கையைத் தட்டினாள். மறுநிமிடம் அங்கு ஒரு வெள்ளைப் பசு நின்றது.

அவள் அண்ணாமலையிடம் "இந்தப் பசு நீ எப்போது கறந்தாலும் எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கும். இதைக் கொண்டு நீயும் உன் மனைவி மக்களும் சுகமாக வாழுங்கள்" என்று கூறி மறைந்தாள்.

அண்ணாமலை மகிழ்ச்சியுடன் பசுவை ஓட்டிக் கொண்டு தன் வீட்டை அடைந்தான். பசுவைக் கண்ட அவனது மனைவி மாகாளி "ஆ! ஏது பசு" எனக் கேட்கவே அண்ணாமலை காட்டில் நடந்ததைக் கூறினான்.

மாகாளி உடனேயே வீட்டிலிருந்த பாத்திரங்களை எல்லாம் காலி செய்து அவற்றில் பாலைக் கறந்தாள். அந்தப் பசு பாலைக் கொடுத்துக் கொண்டே இருந்தது. அவ்வளவு தான்! அன்று முதல் பால் வியாபாரத்தில் அவள் இறங்கிவிட்டாள்.

பத்து நாட்களானதும் மாகாளிக்கும் பால் கறந்து கறந்து அலுத்து போயிற்று. அதனால் அவள் அண்ணாமலையிடம் "வன தேவதை இந்தப் பசுவை நம் தலையில் கட்டி கையை வலிக்கச் செய்துவிட்டாள். அதனால் இந்தப் பசுவை அவளிடமே கொடுத்து விட்டு அந்தமரத்தை வெட்டப்

போவதாக பயமுறுத்து. அவள் உனக்கு இதைவிட நல்லதாக ஏதாவது தருவாள்'' என்றாள்.

அண்ணாமலையும் பசுவை மறு நாள் ஓட்டிக்கொண்டு வன தேவதை தோன்றிய மரத்தடியே போனான். அவன் கோடாலி எடுத்து அந்த மரத்தை வெட்டப் போகவே வனதேவதை தோன்றி ''ஏன் மரத்தை வெட்ட வந்தாய்?'' என்று கேட்டது. அண்ணாமலையும் ''என் மனைவியால் பால் கறக்க முடியவவில்லை. அவளது கைவலிக்கிறதாம்'' என்றான். உடனே வனதேவதை கையைத் தட்டவே பசு மாயமாய் மறைந்தது.

அது இருந்த இடத்தில் ஒரு மண் கலயம் இருந்தது. அதை வனதேவதை அண்ணாமலையிடம் கொடுத்து'' இது அட்சய பாத்திரம் போன்றது. இது நீயோ உன் மனைவியோ விரும்பும் உணவுப் பொருளைக் கொடுக்கக் கூடியது. இதைக் கொண்டாவது நீ திருப்தி அடைவாய் என நம்புகிறேன்'' எனக் கூறி மறைந்தது.

அண்ணாமலை அந்த மண் கலயத்தை எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குப் போய் மாகாளியிடம் அதனைக் காட்டி அதன் சிறப்பைக் கூறினான். அவ்வளவுதான். மறுநாளே மாகாளி தன் வீட்டை ஒரு உணவு விடுதியாக





மாற்றி விட்டாள். அவள் அந்தக் கலயத்தை ரகசியமாக மறைத்து வைத்துக் கொண்டு சாப்பிட வந்தவர்கள் கேட்டவற்றை அந்தக் கலயத்திடம் சொல்லி உணவுப் பொருள்களைப் பெற்று விற்க லானாள்.

ஆனால் பதினைந்து நாட்க ளானதும் மாகாளிக்கு அதுவும் அலுத்துப் போயிற்று. அவள் அண்ணாமலையிடம் "யார் யாரோ வந்து அதைக் கொண்டுவா, இதைக் கொண்டுவா என்று அதிகாரம் செய்கிறான். அவனுக் கெல்லாம் நான் பணிந்து ஓடிய படி வேலை செய்ய வேண்டுமா? அந்த வனதேவதை உன்னைப் பைத்தியக்காரனாக்குகிறது. நாளை நானே உன்னோடு காட்டிற்கு வந்து இந்தக் கலயத்தை அவள் முகத்தில் விட்டெறிந்துவிட்டு வேறு ஏதாவது நல்லதாக வாங்கி வறுகிறேன், பார்" என்றாள்.

மறுநாள் கலயத்தை எடுத்துக் கொண்டு மாகாளி தன் கணவ னோடு காட்டிற்குச் சென்றாள். அண்ணாமலையை அவள் ஓரி டத்தில் நிறுத்தி அங்குள்ள ஒரு மரத்தை வெட்டச் சொன்னாள். அண்ணாமலையும் கோடாலியை எடுத்து மரத்தை வெட்டப் போ னான். அப்போது வனதேவதை அவன் முன் தோன்றி "அண்ணா மலை! பச்சை மரத்தை வேட் டாதே. நீ கேட்ட எல்லாம் கொடுத் தேன். அட்சய பாத்திரம் போன்ற மண்கலயத்தைக் கொடுத்தேன். இன்னமும் திருப்தி இல்லையா?" என்று சற்றுக் கடுமையாகக் கேட்டது.

அண்ணாமலை அதற்கு பதில் சொல்ல ஆரம்பிக்கவே மாகாளி இடைமறித்து "பெரிய மண்கலயத் தைக் கொடுத்தாய் போ! இத னால் நான் படும் கஷ்டம் உனக்கு என்ன தெரியும்? எனக்கு இது வேண்டாம். இதற்கு பதிலாக எனக்கு ஒருபையைக் கொடு. அதில் நான் எப்போது கைவிட மலும் கைநிறையத் தங்கநாண யங்கள் வரவேண்டும். தெரிந்

த்தா?'' என்று கூறி மண்கல யத்தை வனதேவதை முன் விட்டெறிந்தாள். மண்கலயம் சுக்கல் சுக்கலாக உடைந்து போயிற்று.

அதைக் கண்டு வனதேவதை பலமாகச் சிரித்து "நீங்கள் இருவரும் உங்களுக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் போக்கடித்து விட்டீர்கள். நான் கொடுத்த பொருளை அப்படியே திருப்பிக் கொடுத்தால் தான் நான் வேறொரு பொருளைக் கொடுக்க முடியும்'' என்றது.

அது கேட்டு மாகாளி அண்ணாமலையிடம் "அவள் ஏதோ சொல்கிறாளாம். நீயும் ஆடாமல் அசையாமல் கேட்டுக் கொண்டிருக்கிறாயே. காட்டிலுள்ள மரங்களை எல்லாம் வெட்டித் தள்ளு'' என்று கத்திக் கூறினாள். அண்ணாமலையும் தட்டுத் தடுமாறிய வாறே போய் ஒரு மரத்தை வெட்டப் போனான்.

அப்போது வனதேவதை "இந்தக் காட்டில் ஒரு மரத்தைக் கூட உன்னாலோ உன் மனைவியாலோ வெட்டிவிட முடியாது'' என்று கூறிவிட்டு மறைந்து போயிற்று. அண்ணாமலையின் கையிலிருந்த கோடாலி தானே அவன் கையை விட்டு விலகி தூரப் போய் விழுந்தது. அவனது இருகைகளும் சூம்பிப் போய் தளர்ந்து தொங்கின. அவற்றை உயர்த்த முடியவில்லை.

அதைக் கண்ட மாகாளி வாயி



லும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு "அம்மா! தாயே! எங்களை மன்னித்து விடு. இப்படிக் கொடிய தண்டனையை எங்களுக்குக் கொடுத்தது சரியா?" என்று கதறினாள். ஆனால் வனதேவதை அவர்கள் முன் வரவில்லை. கணவனும் மனைவியும் கண்ணீர் உகுத்தவாறே தம் வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள்.

மாகாளி அன்று முதல் காட்டில் அலைந்து திரிந்து வனதேவதையைத் தேடினாள். கத்திக் கூப்பிட்டுப் பார்த்தாள். காட்டில் கிடைக்கும் கிழங்கு தேன் முதலியவற்றை எடுத்து வந்து விற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றி வரலானாள்

நாளாக ஆக அவள் இலந்தை நெல்லி, புளி என்று தன் வீட்டைச் சுற்றி வளர்க்கலானாள். காய்கறிச் செடிகளைப் பயிரிட்டாள். நாலைந்து வருடங்களில் மரங்களும் வளர்ந்து கனிகளைக் கொடுத்தன.

ஒரு நாள் அம்மரங்களின் கனிகளைக் கொய்து வண்டியில் போட்டுக் கொண்டு மாகாளி அடுத்த ஊர் சந்தையில் விற்றாள். அதற்கு ஆயிரம் ரூபாய் கிடைத்தது. அதோடு அவள் வீட்டிற்கு வந்து தன் கணவனிடம் பணத்தைக் கொடுத்து "உண்மையில் வனதேவதை நம் கண்களைத் திறந்துவிட்டது. மனிதன் தான் வாழ மரங்களை வெட்டக் கூடாது, அவற்றை வளர்த்தாலே சுக வாழ்வு வாழலாம் என்பதை அது தெரிவித்திருக்கிறது. இது நமக்கு நல்லதொரு பாடம்" என்றாள்.

இப்படி அவள் மனதாரச் சொன்னதும் அண்ணாமலையின் கைகள் முன்போலாகி செயல்படத் தொடங்கின. அவன் அவள் கொடுத்த பணத்தைக் கையை நீட்டி வாங்கினான். அதுகண்டு மாகாளி அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. அவள் "இது வனதேவதையின் அருளே" எனக் கூறிக் கண்ணிற்குத் தெரியாத வனதேவதையை வணங்கினாள்.



## அம்புலிமாமா செய்திகள்

### மூன்று வயது மேதை!



உத்திர பிரதேசத்தில் டேராடூனைச் சேர்ந்த மீனாட்சி என்னும் மூன்று வயதுச் சிறுமி எளிதில் செய்தித்தாள் களைப் படிக்கிறாளாம். மிக அழகாக வாக்கியங்களை எழுதுகிறாள். மிக எளிதில் எண்களைப் பெருக்கிவிடு கிறாள். இவை எல்லாம் கண்டு அவளது தாய் மஞ்சுஷா வும் தந்தையான ஹவில்தார் பாத்ராவும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்துள்ளார்கள். ஆனால் அச்சிறுமிக்கு ஐந்து வயது ஆகாததால் பள்ளியில் சேர்க்க முடியவில்லை. அவளது பெற்றோர்களும் அதிகமாகப் படிக்காதவர்கள். அதனால் அவர்களால் அவளுக்கு வீட்டிலும் சொல்லிக் கொடுக்க முடியவில்லை என்று அவர்கள் குறைப்பட்டுக் கொள்கிறார்கள்.

### உயிர் காக்க

மெக்சிகோவைச் சேர்ந்த பெர்னார்ட் அகாஸ்டா என்ற சிறுவன் மின்சாரத்தால் தாக்குண்டு காயமுற்றான். உடல் முழுவதும் காயமுற்று யாரும் பாராத இடத்தில் விழுந்து கிடந்தான். தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தன் வலது கை மாமிசத்தைக் கடித்துத் தின்றானாம்.

### நெருப்புடன் விளையாட்டு

அமெரிக்காவில் ஓஹியோ மரியனாவைச் சேர்ந்த ஆஸ்டின் மெஜ்னர் என்ற ஐந்து வயதுச் சிறுவன் தொலைக் காட்சியில் கார்ட்டூன் படங்களைக் கண்டுகளிப்பவன். அதில் இருவர் பல பொருள்களுக்கு தீ மூட்டும் காட்சியை அவன் கண்டு அதுபோல தானும் தீமூட்டப் பழகினான். அவள் தாய் அவனை மிரட்டியும் அவன் கேட்க வில்லை. இப்படியே செய்து ஒருநாள் அவன் தன் தங்கையின் ஆடைக்கே நெருப்பு மூட்டிடவே அவள் எரிந்து இறந்து போனாள்.

### சிசுவைக் காத்த நாய்

மகாராஷ்டிரத்தில் மங்குரூரியல் ஏற்பட்ட பூகம்பத்தில் 18 மாதக் குழந்தை ஒன்று இடிபாடுகளுக்கிடையே அகப்பட்டுக் கொண் டது. அது அப்படியே நான்கு நாட்கள் இருந் தது. மீட்புப் பணியில் அங்கு ஈடுபட்டிருந்த பிரான்ஸ் நாட்டை சேர்ந்த ஒரு குழு தன்னோடு அழைத்து வந்த ஒரு போலீஸ் நாயின் உதவி யால் குழந்தை இருக்கும் இடத்தைக் கண்டது. உடனே இடிந்த பகுதிகளை அகற்றி அவற்றிற்கு எட்டடி கீழே அகப்பட்டிருந்த அக்குழந்தையை எடுத்துக் காப்பாற்றியது.





# விதியை மீற முடியுமா?

ஒரு ஊரில் சின்னப்பன் என்ற மாடுமேய்க்கும் சிறுவன் இருந்தான். அவன் தினமும் காலையில் எழுந்து தன் எஜமானனான பெரிய பண்ணையாரின் ஆடு மாடுகளை ஓட்டிக் கொண்டு மேய்க்கப் போவான். அந்த கிராமத்தை அடுத்த சற்று தூரத்தில் பரந்த வெளி இருந்தது. ஒரு காலத்தில் அங்கு அடர்ந்து வளரந்த மரங்கள் இருந்தன. ஆனால் இப்போதோ அங்கு ஆங்காங்கே பசுமை இருந்தது. அதுவும் ஏதேதோ செடி கொடிகள் முளைத்திருந்தன. புல்லும் ஏராளமாக வளர்ந்திருந்தது.

அங்குதான் அவ்வூராரின் ஆடு மாடுகளைச் சிறுவர்கள் ஓட்டிப் போய் மேயவிடுவார்கள். அவர்கள் அங்கு விளையாடித்திரிந்து விட்டு மாலையானதும் ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டு வீட்டிற்குத் திரும்பிச் செல்வார்கள்.

ஒருநாள் சின்னப்பன் வழக்கம் போல ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டு அந்தப் பரந்த வெளிக்குப் போனான். ஆனால் அன்று ஏதோ ஒரு பண்டிகைநாள். அதனால் மற்ற சிறுவர்கள் வரவில்லை. சின்னப்பனுக்கு அப்பண்டிகை நாள் பற்றி நினைவே இருக்கவில்லை. தனியாக இருந்த அவன் தன் ஆடுகளையும் அங்கும் இங்கும் விரட்டி அடித்து ஓட வைத்துக் கொண்டிருந்தான்.

அப்போது திடீரென ஒரு பறவை எங்கிருந்தோ வந்து அவன் மீது விழுந்தது. அவன் அதைச் சட்டெனப் பிடித்து அதன் கழுத்தை நெரித்துக் கொன்றான். அதன் உடலைப் பிளந்து அந்த இரு பாகங்களையும் தூக்கி ஒரு புதர் மீது விட்டெறிந்தான். அவை

—எஸ். சோபினி

அங்குள்ள இலைகள் மீது பட்டதும் ஒன்று சேர்ந்து உயிர் பெற்று உயரப் பறந்து போயிற்று.

சின்னப்பன் அதைக் கண்டு மலைத்து நின்றான். அவன் ஓடிப்போய் அந்த இடத்தைப் பார்த்தான். அங்கு ஒரு வகை இலைகளைக் கொண்டு செடிகள் அடர்ந்து வளர்ந்திருந்தன. அந்த இலைகளின் சக்தியால்தான் அந்த பறவைகள் உயிர்பெற்றிருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. அந்த இலைகள் சஞ்சீவினி இலைகளாகத்தான் இருக்க வேண்டும் என அவன் எண்ணினான். அதையும் பரீட்சித்துப் பார்க்கலாம் என நினைத்து அவன் அங்குமிங்கும் தேடி இறந்துகிடந்த பறவை ஒன்றை எடுத்து அந்த இலைகளின் மீது போட்டான். அது மறு விநாடியே உயிர்ப் பெற்றுப் பறந்து போயிற்று.

மறுநாள் அவன் தன் நண்பர்களை பார்த்தபோது தான் கண்ட சஞ்சீவினி இலைகளைப் பற்றி சின்னப்பன் கூறினான். அதைக் கொண்டு தானே இறந்த பிராணிகளை உயிர்ப்பித்ததாகவும் கூறினான். ஆனால் அவனது நண்பர்களோ அதைக் கேட்டுச் சிரித்தார்கள். அதனால் அவன் கோபம் கொண்டான். அதற்குப் பின் தான் அறிந்து கொண்ட இரகசியத்தை வேறு யாரிடமும் கூறவிலலை.



சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் அவ்வூர் பிரமுகர் ஒருவர் இறந்துவிட்டார். அவர் தாராள மனம் கொண்டவராக இருந்தார். தான தர்மங்களை ஏராளமாகச் செய்தவர். எனவே அவரை அந்த ஊரார் கடவுளுக்குச் சமமாகக் கருதி வந்தனர்.

அவர் ஒரு மாத காலமாகவே நோயுற்றுப் படுக்கையில் கிடந்தார். வைத்தியர்கள் மருந்துகளை எல்லாம் மாற்றிக் கொடுத்துப் பார்த்தார்கள். ஆனால் எந்தப் பலனும் ஏற்படவில்லை. காலை வேளையில் அந்தப் பிரமுகர்

வீட்டு வாசலில் கூட்டம் நிற்பது கண்டு சின்னப்பன் என்னவென்று பார்க்கப் போனான்.

அப்போது சிலர் "விதி யாரை விட்டது? வைத்தியர்களால் என்ன செய்ய முடியும்? மருந்துதான் கொடுக்க முடியும். உயிரையா கொடுக்க முடியும்?" என்று பேசிக் கொண்டிருந்தார்கள். இதைச் சின்னப்பன் கேட்டுக் கொண்டிருந் தான்.

அவன் உடனே "இறந்து கிடக் கும் இவரைப் பிழைக்க வைக்கும் வழி எனக்குத் தெரியும். நான் மாடு மேய்க்கப் போகும் இடத்தில் சஞ்சீவினிச் செடி உள்ளது" எனக் கூறி தான் இறந்த பிராணி களை உயிப்பித்த விதத்தையும் கூறினான்.

பலர் அவன் சொன்னதை நம்பவில்லை. ஓரிருவர் மட்டும் "நிஜமாகவா?" என்று கேட்கவே சின்னப்பன் அவர்களை அழைத் துக் கொண்டு தான் சஞ்சீவினி செடிகளை பார்த்த இடத்திற்கு அழைத்துச் சென்றான். ஆனால் இந்த இடத்தை அடைந்தபோது அவன் திடுக்கிட்டு நின்றான். ஏனெனில் தினமும் அவன் பார்த்த அச் செடிகள் அன்று அங்கே தென்படவில்லை.

அவன் 'திருதிரு'வென்று விழித் தான். அவனோடு வந்தவர்கள் அவனைக் கோபித்துக் கொண்டு இரண்டு அடிகள் கூட கொடுத் தனர். தினமும் தான் கண்டு வந்த அந்தச் செடிகள் எப்படி மாய மாயின என்று சின்னப்பன் யோசிக்க யோசிக்க அவன் தலை தான் சுழன்றது.

அவன் மனதில் "ஆமாம் விதியை யாரும் வெல்ல முடியாது தான். அதனால்தான் அந்தப் பிரமுகரை உயிர்ப்பிக்க விடாமல் சஞ்சீவினிச் செடிகள் மாயமாய் மறைந்துவிட்டன போலும்" என்று கூறிக் கொண்டு ஆறுதல் அடைந் தான்.



# இயற்கை விநோதங்கள்

## பாம்பு மெதுவாகவே போகிறது!




பாம்புகள் வேகமாகப் போகின்றன என்று ஒரு தப்பான அபிப்பிராயம் உள்ளது. உண்மையில் அவை மெதுவாகவே போகின்றன. உணவைப் பிடிக்கப் போகையில் அவை வேகமாகப் போகின்றன. நல்ல பாம்பு மணிக்குப் பத்துமைல் வேகத்தில் செல்லும். இதுவே பாம்புகளில் மிக வேக மாகச் செல்வது.

## முளைவிடும் உருளைக்கிழங்கு




உருளைக் கிழங்கை ஒரே இடத்தில் சில நாட்கள் புதைத்து வைத்திருந்தால் அதில் சிறு முளைகள் வருவதைக் காணலாம். அந்த முளைகள் முளைத்து வருவதற்கான சத்து அந்தக் கிழங்கிலேயே உள்ளது. அதைக் கொண்டே முளைகள் வளர்கின்றன.

## பறக்கும் 'நரி'

வௌவால் மிகச் சிறிய பிராணி. இதன் தலை சுண்டெலியின் தலையைப் போல இருக்கும். ஆனால் ஒருவகை வௌவாலின் தலை நரித்தலை போலிருக்கும். எனவே இவ்வகை வௌவாலை பறக்கும் 'நரி' என்கிறார்கள். இதன் இறகுகள் ஆறு அடி நீளம். இதன் பார்வை கூர்மையானது. நம் நாட்டில் இவை ஆங்காங்கே தென்படுகின்றன.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!






SUPER
RUBBER










THE

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்**



Anant Desai



S. B. Prasad

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * ஜனவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **நாவினிக்க உண்ணலாம்**

இரண்டாவது போட்டோ: **நெஞ்சினிக்கக் கொஞ்சலாம்**

பரிசு பெற்றவர்: **ச. ஆ. கேசவன், இனாம்மணியாச்சி**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

AMBULIMAMA
(Tamil)

January 19
Regd. No. M. 4